# தொல்காப்பியம்

## இளம்பூரணம்

# பொருளதிகாரம்

## களவியல், கற்பியல், பொருளியல்

பதிப்பாசிரியன்:

வ. உ. சிதம்பரம்பிள்ளை

# பதிப்பாசிரியர் குறிப்பு

இப்பகுதியில் இப்பொழுது வெளிப்படுவது தொல்காப்பியம் பொருளதிகார ளம்பூரணருரையில் இரண்டாவது பகுதி. இதிலே களவியல் கற்பியல் பொருளியல் என் ன அடங்கியுள்ளன. ஏனை இயல்களும் அச்சில் இருக்கின்றன. விரைவில் இளம் ரணமுழுமையும் வெளிவரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதனை வெளியிடுதற் க் கிடைத்த கடிதப் பிரதிகளில் ஒன்று காலஞ்சென்ற த. மு. சொர்னம்பிள்ளையவர்க க் குரியதாகும். அவர்கள் பிரதிசெய்யும் பொழுது உரையில் இல்லாத பலசொற்றொடர ள இடையிடையே பெய்திருக்கிறார்கள் என்பது பல காரணங்களால் ஊகிக்கக்கூடிய ாயிருக்கிறது. பிறிதொரு பிரதி ஸ்ரீமான் தி. நா. சுப்பிரமணிய ஐயரிடமிருந்து டைத்தது. இது சொர்னம்பிள்ளை யவர்களது பிரதியைப்பார்த்து எழுதிய கடிதப் ரதியின் பிரதியென்று தெரியவருகிறது. இதிலும் பலவகையான இடைச்செருகல்கள் ள்ளன. மூன்றாவது பிரதி ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுக் குரியது. இது 12 ல் ஸ்ரீமான் தி. த. கனகசுந்தரம்பிள்ளை யவர்கள் ஏட்டுப்பிரதியைப்பார்த்து எழுதிய சுப்பிரதியாகும். இதுவே இடைச்செருகல்களைத் தெரிந்துகொள்வதற்கும் மூலத்தின் ந்தபாடத்தை நிச்சயிப்பதற்கும் பெரிதும் பயன்பட்டது. இதனையே த. மு. சொர்னம் ள்ளை யவர்கள் இரவலாகப் பெற்றுத்தமக்குத் தோற்றியவாறு பலவிடங்களில் மாற்றி க் கூட்டியும் பிரதிசெய்து கொண்டார்கள்.

இப்பொழுது வெளியிடும் பகுதியில் ஒரு சில இடங்களில் இளம்பூரணருரை
றந்து போய்விட்டது. இவ்விடங்களில் நச்சினார்க்கினியருரையைத்தழுவி உரையெழு
சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வகையான இடங்கள் அங்கங்கே அடையாளமிட்டுக் காட்
பட்டுள்ளன. இருதலைப்பகரத்துள் அமைத்துள்ள எழுத்துக்களும் சொற்களும் இன்
மையாமைபற்றிப் புதிதாகச் சேர்க்கப்பட்டன வாகும்.

# மூ ன் று வ து - க ள வி ய ல்.

அசு. இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்
டுறையமை நல்யாழ்த் துணைமையோ
ரியல்பே. என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின்,
களவியல் என்னும் பெயர்த்து; க
வொழுக்கம் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். அஃதாதல் ஈண்டு உரைக்கின்றதனு
யன் இன்றும் களவென்பது அறம் அன்மையின் [எனில்], அற்றன்று; களவு என்னு
சொற் கண்டுழியெல்லாம் அறப்பாற்படாதென்றல் அமையாது. களவாவது, பிற
தரியபொருள் மறையிற் கோடல். இன்னதன்றி, ஒத்தார்க்கும்
மிக்கார்க்கும் பொதுவாகி
ன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறை
துப் புணர்ந்து பின்னும் [1]அறநிலைவழா மன்றலால், இஃது [2]அறமெனப்படும். அன்

ாதல் இச்சூத்திரத்தானும் விளங்கும்.

அஃதற்றாக, மேலை யோத்திளேடு

இவ்வோத்திற்கு இயைபு என்னை யெனிெ

ீமேல் கைக்கிளைமுதற் பெருந்திணை இறுவாயாக எழுதிணை யோதி அவற்றி
புறத்து நிகழுந் திணைகளு மோதிப் போந்தார். அவ் வெழுதிணையினும் ஒருதலைவே
கையாகிய கைக்கிளையும் ஒப்பில்கூட்டமாகிய பெருந்திணையும் ஒ[ழி]த்து இருவரன்ட
ாத்த நிலைமையாகிய நடுவண் ஐந்திணைக்கண்ணும் புணர்ப்பும் பிரிதலும் இருத்தலு
இரங்கலும் ஊடலுமாகிய உரிப்பொருள் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோ
னும் நிகழுமாதலின், அவ்விருவகைக் கைகோளினுங் களவாகிய கைகோள் இவ்வோ
தினுள் உணர்த்துதலான் அவற்றின் பின் கூறப்பட்டது. இது நடுவணைந்திணைக்க
நிகழும் பொருட்பாகுபாடாயின், அகத்திணையியலின் பின் வைக்கற்பாலது எனி

ஆண்டு வைக்கக்கருதின் " வேட்சி தானே குறிஞ்சியது
புறனே " [புறத்திணை-௫] என்னும் மாட்டேறு பெறுதாம்,
அதனிடைக் களவியலும் கற்பியலும் கிடத்தலான் என்.

மற்றும், அஃது யாங்ஙனம் உணர்த்திஞரோ
எனின்,

"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற்
புணர்வுமென்
ருங்கநால் வகையினு மறைந்த
சார்வொடு

மறையென மொழிதன் மறையோ ராறே" [செய்யுளியல்-கள

ன்பதனுன் இந்நால்வகையும் இதனுள் உரைக்கப்படுகின்றதென்று கொள்ளப்பு
ாமப்புணர்ச்சி யெனினும், இயற்கைப் புணர்ச்சி யெனினும், முன்னுறு புணர்ச்சி யென
றும், தெய்வப்புணர்ச்சி யெனினும் ஒக்கும். இவையெல்லாம் காரணப்பெயர். அஃத
து, ஒத்தார்இருவர் தாமே கூடுங் கூட்டம். இடந்தலைப்பாடாவது, இயற்கைப்புணர்ச்
ணர்ந்த தலைமகன் பிற்றைஞான்றும் அவ்விடத்துச் சென்று எதிர்ப்படுதல். பாங்க
ட்டமாவது, இப்புணர்ச்சி பாங்கற் குரைத்து, நீ யெமக்குத் துணையாக வேண்டு[3]மென்

1. 'அறநிலைவழாமனிற்றவால்' என்றிருப்பின் நலம். 2. 'இஃதாமெனப்படு
ான்று பிரதியிலுள்ளது. 3. 'மென்றவழி' என்றிருத்தல் வேண்டும் போலும்.





வன் குறிவழிச் சென்று தலைமகள் நின்ற நிலையை யுணர்த்தச் சென்று கூடுதல். தோ
ற்கூட்டமாவது, இவற்றின் பின்னர் இக்கூட்டம்
நீடச்சேறல் வேண்டித் தோழியை ரந்து பின்னின்று
அவள் வாயிலாகக் கூடுதல். இவை நான்கும் இம்முறையே
நிகழு 'ன்று கொள்க. இனி இம்முறை நிகழாது இடையீடு
பட்டு[ம்] வரும். அஃதாமாறு லைமகள் எதிர்ப்பட்டுழி
அன்புடையா ரெல்லார்க்கும் இயற்கைப் புண ர்ச்சி
முட்டின்றி டுதல் உலகிய லன்மையான் தலைம களை
யாதானும் ஓரிடத்து எதிர்ப்பட்ட தலைமகன் அவள்
காதற்குறிப்புணர்ந்து நின்று, கூட்டத்திற்கு இடையீடு
உண்டாயுழியும் ஆண்டு ென்ற வேட்கை தணியாது நின்று,
முன்னை ஞான்று கண்டாற்போலப் பிற்றை ஞான் ம்
காணலாகுமோ என ஆண்டுச் சேறலும், தலைமகளும்
அவ்வாறே வேட்கையான்

புடர்ப்புண்டு ஆண்வேருதலும் ஆகியவழிப் புணர்ச்சி நிகழும். ஆண்டு ஆயத்தாரானுதல்
)றாரானுதல் இடையீடு பட்டுழித் தன்வருத்தத்தினைப் பாங்கற்கு உணர்த்தி அவன் தலை
கள் நின்றுழி யறிந்து கூற ஆண்டுச்சென்று புணரும்.

அவ்விடத்தும் இடையீடு பட்டுழித்

தாழிவாயிலாக முயன்றெய்தும். இவ்வாறும், ஒரோவொன்று இடையீடுபட்டு வருதலுப்
லாம். அவ்வாறாயின், இயற்கைப் புணர்ச்சி இடையீடுபட்டுழி வரைந்தெய்தல்
க்கதன்றோ எனின், வரைந்தெய்துந்திறம் நீட்டிக்குமாயின் வேட்கை சிறத்தலானன்று தா
ணர்ச்சி கருதி முயல்ப. இவ்வாறு சான்றோர் செய்யுள் வந்தனவும் உளவோ எனின்,
ான்றோர் செய்யுட்களும் இவ்வாறு பொருள்கொள்ள ஏற்பன உள. அவையாவன:—

"மருந்திற் றீரா மண்ணி னாகா

தருந்தவ முயற்சியி னகற்றலு மரிதே
தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய
தேனிமிர் நறவின் றேறல் போல

நீதர வந்த நிறையருந் துயரநின்

ஆடுகொடி மருங்கி னருளி னல்லது
பிறிதிற் றீரா தென்பது பின்னின்
றறியக் கூறுது மெழுமோ நெஞ்சே
நாவலம் கொண்டு புகழ்நடதல் வேண்டித்த
ஆமெழைத் தடக்கை யறத்துமுறை செய்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்த
விளங்குமுத் துறைக்கும் வெண்பற்
பன்மாண் சாயற் பரதவர் மகட்கே."

தனுள் "ஆடுகொடி மருங்கி னருளி னல்லது பிறிதிற் றீராது" என்பதனான் இயற்கைப்
ணர்ச்சி இடையீடு பட்டுப் புணர்ச்சிகருதிக் கூறியவாறு காண்க.

"மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளிர்—குயில்பயிலும்
கன்னி யிளஞாழற் பூம்பொழிலி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு." [திணைமொழி-சக]

ளுள் ஐயநிலையைப் பாங்கற் குரைத்தலின் புணர்ச்சியின்றுயிற்று.

"கொண்டன் மாமழை [1]குடக்கேர்பு குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசே ரைம்பா றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்



பெருங்க ணாய மூவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கு நிலவுமணன்

முற்றத்துப்

பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
யருளினு மருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா னெஞ்சே

யென்னதூஉ

மருந்துய ரவலந் தீர்க்கு

மருந்து பிறிதில்லையா னுற்ற நோய்க்கே." [நற்றிணை-௱சஎ]

)தனுள் 'அருளினும் அருளாளாயினும்' என்றமையால் கூட்டமின்மையும், 'பின்னிலை
முனியல்' என்றமையால் இரந்து பின்னிற்பானுகத்
[1]துணிந்தமையும், தோழியிற் கூட்டத்து இயற்கைப்

புணர்ச்சிக்கு ஒருப்பட்டமையும் உணர்க.

"நறவுக்கம ழலரி நற[வு] வாய்விரிந்
திறங்கிதழ் கமழு மிசைவாய் நெய்தற்
கண்ணித் தலையர் கருங்கைப் பரதவர்

நின்னைய ரல்லரோ நெறிதா ழோதி
யொண்சுணங் கிளமுலை யொருஞான்று

புணரி

னுண்கயிற் றுறவலை நுமரொடு வாங்கிக்
கைதை வேலி யிவ்வூர்ச்
செய்துட் டேனே சிறுகுடி யானே."

பரியீரெனச் சேட்படுத்தவழிக் கூறியது.

"கூறுவங் கொல்லோ கூறலங்

கொல்லெனக்

கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
யரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்மலர் கமழுங் கூந்தற் 2றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி
னிளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழி படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சு

லஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சி யாமத்து முயங்கினள் பெயர்வோ
ளான்ற கற்பிற் சான்ற பேரிய
லம்மா வரிவையோ வல்லள் [3]தெனுஅ
தாஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய வுருகெழு கவாஅ
னேர்மலை நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் கொல்லெனத் துணியுமென் னெஞ்சே." [அகம்-கக அ]

...து தோழியிற்கூடிய தலைமகன் கூற்று.

"அவரை பொருந்திய பைங்குர லேனற்
கவரி மடமா கதூஉம் படர்சாரன்
கானக நாட மறவல் வயங்கிழைக்
கியானிடை நின்ற புனே." [ஐந்திணையெழுபக]

1. 'துணிந்தமையாலும்' எனப்பிரதியில் உள்ளது. 2. 'நாவிசை' என்பது பிரதி...



...தனுனே முற்றுற்ற கூட்டமின்மை யுணர்க. இனி ஒரு கூட்ட[மு]ம் நிகழாது ஆண்...
...ந்தடைவேட்கை இருவர்க்கும் தணியாது நின்று வரைந்தெய்தலும் ஒன்று. இவ்வகை...
...றன் இக்களவொழுக்கம் மூவகைப் படும்.

இனி இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், காமப்புணர்ச்சிக்கு இலக்...
...ாவகையாற் குறியிதெலை உணர்த்துதல் நுதலிற்று.

இன்பமும் பொருளு ... காணுங் காலை என்பது —இன்பமும் பொருளு றமும் என்று சொல்லப்பட்டு, அன்பொடுபுணர்ந்த நடுவ ணைந்திணையிடத்து நிகழு மக்கூட்டத்தினை ஆராயுங்காலத்து என்றவாறு.

அன்பொடு புணர்ந்த ஐந்திணை என்றதனால் கைக்கிளை பெருந்திணையை ஒழித்த ஏற்ற முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனக்கொள்ளப்படும். அவை அன்பொடு ணர்ந்தவாறு என்னை யெனின்,

கைக்கிளைபெருந்திணையைப் போலாமை, ஒத்த அன்பினராகிப் புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் இரங்கலும் நிகழ்த்துபவாகலானும், அவை நிகழுங்கால் அத்திணைக்கு உறுப்பாகிய இடமும் காலமும் கருப்பொருளும் துணையாகி நிகழுமாகலானும், இவை அன்பொடு புணர்ந்தன என்க. அஃதேல் ஐந்திணைப் புறத்த வாகிய வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்பனவும் அன்பொடு புணர்ந்தனவாம் எனின், அவை அன்புடையார் பலர்கூடி நிகழ்த்துபவை, யாகலின், அன்பொடு புணர்ந்தனவாம்.

> “ அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
> மறத்திற்கு மஃதே துணை” [குறள்-எசு]

என்பதனானும் கொள்க.

இனி இவ்வைந்திணையும் இன்பமும் பொருளும் அறமு மாயினவாறு என்னை யெனின், புணர்தல் முதலாகிய ஐந்துபொருளும் இன்பந்தருதலின்

இன்பமாயின முல்லை முதலாகிய ஐந்திணைக்கும்
உரிப்பாகிய நிலமும் காலமும் கருப்பொருளுட
இவற்றின் புறத்தாகிய வெட்சி வஞ்சி உழிஞை தும்பை எ[ன்ப]னவும் வாகையுள் ஒரு
டறும் பொருளாகலானும், புணர்தல் முதலாகிய உரிப்பொருளான் வருவதோ
கேடின்மையானும், பொருளாயின. இவ்வொழுக்கங்கள் அறத்தின்வழி நிகழ்தல
னும், பாலையாகிய வாகைப்படலத்துள் அறநிலை கூறுதலானும், இவை அறமாயின
அஃதேல், கைக்கிளை பெருந்திணையும் இவற்றின் புறமாகிய பாடாண்பாட்டும் காஞ்சி
யும் அறமுதலாகிய மூன்றுமன்றி அன்பொடு புணர்தல் வேண்டுமெனின், காஞ்சி அ
பொடு புணராமையும் பாடாண்பாட்டு அன்பொடு புணர்தல் ஒருதலையன்மையும் அ
ிவாத்தினுள் கண்டுகொள்க. ஏனையிரண்டும் அன்பொடு
புணராமை மேற் சொல்லப்பட்டன. இனி அவை அறனும்
பொருளுமாய் இன்பமாகா. அஃதேல், அறனும் பொரு
னும் ஆகாமையும் வேண்டுமெனின், குலனும் குணனும் கல்வியு முடையராகிய அந்தண
ன விசேடித்தவழி ஏனையோர்க்கு இம்மூன்று பொருளு மியைதல் வேண்டுமென்னும்
யம மின்மையின் ஏற்றவழிக் கொள்ளப்படும்.

இனி ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம் என்பது புணர்தல் முதலாகிய உரி
பொருளும் அந்நிலமும் காலமும் கருப்பொருளும், களவினும் கற்பினும் வருதலின், அவை
ரோவொன்ற இருவகைப்படும். அவற்றுள், புணர்ச்சியாகிய இருவகையினும் களவாகிய
காமக்கூட்டம் எனக்கொள்க.

இன்னும் அன்பொடுபுணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம் என்றதனுள்
ல்லாநிலத்தினும் காமக்கூட்டம் நிகழப்பெறும் என்று கொள்க. அவ்வாறுதல் சான்
றோர் செய்யுளகத்துக் காண்க.

மறைவேயார் தேஎத்... 

பொருளதிகாரம் - களவியல

னம் எட்டனுள்ளும் துறையமை நல்யாழினை

யுடையராகிய துணைமையோர் நெறி

ன்றவாறு.

மறையோர் என்றது அந்தணரை. தேஎம் என்றது அவரதாகிய நூலை. மணம் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. பிரமமாவது, கன்னியை அணிகலனணிந்து பிரமசாரியா யிருப்பா னொருவனுக்குத் தானமாகக்கொடுப்பது. பிரசாபத்தியமாவது, மகட்கோடற் குரிய கோத்திரத்தார் மகள் வேண்டியவழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது. ஆரிடமாவது, ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக்கொடுப்பது. தெய்வமாவது வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவற்கு வேள்வித்தீ முன்னர்க் கொடுப்பது. காந்திருவமாவது ஒத்த இருவர் தாமே கூடுங்கூட்டம். அசுரமாவது, வில்லேற்றினானுதல் திரிபின்றி யெய்தானுதல் கோடற்குரியனெனக் கூறியவழி அது செய்தாற்குக் கொடுத்தல். இராக்கதமாவது, தலைமகள் தன்னினும் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது. பைசாசமாவது, களித்தார்மாட்டும் துயின்றார்மாட்டும் கூடுதல்.

"அறநிலை யொப்பே பொருள்கோ டெய்வம்

யாழோர் கூட்ட மரும்பொருள் வினையே

யிராக்கதம் பேய்நிலை யென்றிக் கூறிய

மறையோர் மன்ற லெட்டவை யவற்றுட்

டுறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பினதன்

பொருண்மை யென்மனார் புலமை

யோரே."

என்பதனானுங் கொள்க. துறையமை நல்யாழ்த்

துணைமையோராவார் கந்திருவர். அவ

ருவராகித் திரிதலின் துணைமையோர் என்றார். [1]துணையன்பாவது அவர் ஒழுகலா றே போலத்து மக்கண்மாட்டு நிகழ்வது. ஈண்டுக் காமக்கூட்டமென வோதப்பட்டது மன

கற்பமாகிய வெட்டனுள்ளுங் கந்திருவமென்றவாறு. மாலைசூட்டல் யாதனுள் அடங்
மெனின், அதுவும் ஒத்த அன்பினராய் நிகழ்தலிற் கந்திருவப் பாற்படும்.

அறனும் பொருளு மின்பமும் என்னாது, இன்பமும் பொருளும் அறனு
ன்றது என்னை [எனின்], பலவகை யுயிர்கட்கும வரும் இன்பம் இருவகைபபடும். அவை

பாவன, போக நுகர்தலும் வீடுபெறுதலும் என.

அவற்றுள் வீடுபேறு துறவறத்தினின்றார்

ல்லது எய்தல் அரிதாயிற்று. போகநுகர்தல் மனையறத்தார்க் செய்துவது. அவரெய்து
இன்பமும் அவ்வின்பத்திற்குக் காரணமாகிய பொருளும் அப்பொருட்குக் காரணமாகி

அறனும் எனக்காரிய காரணம் நோக்கிவைத்தார் என்க.

இதனாற் சொல்லியது ஈண்டுக்களவென்றோதப் படுகின்ற ஒழுக்கம் அறம்பயவா
புறநெறி யன்று; வேதவிதியாகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு. (

கூ௰. ஒன்றே வேறே யென்றிரு பால்வயி
னொன்றி யுயர்ந்த பால தாணையி

னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே.

என்—னின், இது காமக்கூட்டத்தின்கண் தலைமகனும் தலைமகளும் எதிர்ப்படுகிறனு
அதற்குக் காரணமும் உணர்த்துதல் நுதலிற்று.

ஒன்றே வேறே என்றிருபால்வயின் என்பது—ஒருவனும் ஒருத்தியுமாக இல்
றஞ் செய்துழி, அவ்விருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேறாக்குதலுமாகி
இருவகை ஊழினும் என்றவாறு.

1 ' ... [illegible]



[illegible]

ஒன்றியுயர்ந்த பாலதாணையின் என்றது—இருவருள்ளமும் பிறப்புத்தோறும் ன்றி நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையின் என்றவாறு.

உயர்ந்ததன் மேற்செல்லும் மன நிகழ்ச்சி உயர்ந்த பாலாயிற்று. காமநிகழ்ச்சியின் ண் ஒத்த அன்பினராய்க் கூடுதல் நல்வினையான் அல்லது வாராதென்பது கருத்து.

ஒத்த கிழவனும் கிழத்தியுங் காண்ப என்பது:

ஒப்பு பத்துவகைப்படும். [அவை]

"பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு
திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது
வகையே." [மெய்ப்-உரு]

ன்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துள் [கூறியபத்துமாம்.] [அவற்றுள்] பிறப்பாவது ர்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர், குறவர், நுளையர் என்று பால வருங் குலம். குடிமையாவது அக்குலத்தினுள்ளா ரெல்லாருஞ் சிறப்பாக ஒவ்வாமை ின் அச்சிறப்பாகிய ஒழுக்கம்பற்றிய [குடிவரவு.] குடிவரவைக் குடிமை என்றார்.

" பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்
சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்."
[குறள்-கஎஉ] னப் பிறரும்
குலத்தின்கண்ணே சிறப்பென்பது ஒன்றுண்டென்று
கூறினாராகலின். ஆண்மையாவது, ஆண்மைத்தன்மை.

அஃதாவது, ஆள்வினையுடைமையும் வலி யெய ாமையுமாம்.

•

"மொழியா ததனை முட்டின்றி

முடித்தல்" [மரபியல்-ாஎ] ன்பதனுல் தலைமகள்

மாட்டுப் பெண்மையும் கொள்ளப்படும். அது பெண்டிர்க்கு

இயல்

ாகிய காணம் முதலாயினவும் பெண்ணீர்மையும். ஆண்டென்பது, ஒருவரி னொருவர் ரதியரன்றி ஒத்த பருவத்தராதல். அது குழவிப்பருவங் கழிந்து பதினாறு பிராயத்தானும் ன்னிரண்டு பிராயத்தாளு மாதல். உரு என்பது வனப்பு. நிறுத்த காமவாயில் என்பது லைநிறுத்தப்பட்ட புணர்ச்சிக்கு வாயில். அஃதாவது, ஒருவர்மாட்டு ஒருவர்க்கு நிகழும் ன்பு. நிறை என்பது அடக்கம். அருள் என்பது பிறர் வருத்தத்திற்குப் பரியும் கருணை. ணர் வென்பது அறிவு. திரு என்பது செல்வம். இப்பத்து வகையும் ஒத்த கிழவனும் ழத்தியும் எதிர்ப்படுவர் எனக் கொள்க.

மிக்கோ ... யீஃறே என்பது—இக்குணங்களால் தலைமகன் மிக்கானுயினுங் டியப்படாது என்றவாறு.

எனவே, இவற்றுள் யாதானும் ஒன்றினுயினும் தலைமகள் மிக்காளாயின் ஐந்திணை ற் கடியப்படும் என்றவாறும்

பாலதாணையிற் ... காண்ப என்பது—ஒருவரை யொருவர் கண்டுழியெல்லாம் ணர்ச்சி வேட்கை தோற்றுமையிற் பாலதாணையான் ஒருவரையொருவர் புணர்தற்குறிப் பாடு காண்ப என்றவாறு. மிக்கோனுயினும் என்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை, ற்றுக்கு, எதிர்மறையாக்கி 'இழிந்தோனுயினும் கடியப்படாது' என்றூற் குற்றமென்னை யனின், செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணிவருகின்ற பெருமை யாதலின், இழிந்தா ஞேடு உயர்ந்தாட்குளதாகிய கூட்டமின்மை பெருவழக்காதலின் அது பொருளாகக் காள்ளாம் என்பது. ஈண்டுக் கிழவனும் கிழத்தியும் என ஒருவனு மொருத்தியும் போலக் -றினாராயினும்,

"ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப."

[பொருளியல்-௨௭]

என்பதனானும், இந்நூல் உலகவழக்கே நோக்குதலானும் அவர் பலவகைப்படுவர். அஃ
மாறு அந்தணர் அரசர் வணிகர் வினைஞர் என்னும் நால்வரொடும் அநுலோமர் அறுவ
யும் கூட்டப் பதின்மராவார். இவரை நால்வகை நிலத்தோடு உறழ நாற்பதின்மரா
இவரையும் அவ்வந்நிலத்திற் குரிய ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னுந் தொடக்
தாரோடு கூட்டப் பலராவர். அவரையும் உயிர்ப்பன்மையான் நோக்க வரம்பிலராவர்.(

௯௪. சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப
இழிந்துழி யிழிபே சுட்ட லான.

என்—னின், ஐயம் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

ஒருவன் ஒருத்தியைக் கண்ணுற்றுழி அவ்விருவகையும் உயர்வுடையராயின் ௲ விடத்து ஐயம் சிறந்தது என்று சொல்லுவர். அவர் இழிபுடையராயின், அவ்விடத்து அ

[இழி] பினையே சுட்டி யுணர்தலான் என்றவாறு. சிறப்பு என்பது மிகுதி. ஐயமிகுத
வது மக்களுள்ளாள் அல்லள் தெய்வமோ என மேலாயினரோடே ஐயுறுதல். சிறந்த
என்பதற்குத் தலைமகள்தான் சிறந்துழியும் கொள்ளப்படும்; அவளைக் கண்டவிடம் ஐயப்
தற்குச் சிறந்துழியும் கொள்ளப்படும். உருவமிகுதியுடையளாதலின் ஆயத்தாரிடைக் கா
னும் தெய்வம் என்று ஐயுறுதல். இதனாற் சொல்லியது உலகத்துத் தலைமகனும் தலை

னுமாக நம்மால் வேண்டப்பட்டார் அந்தணர் முதலாகிய

நான்கு வருணத்தினும் ஆ! வேட்டுவர் குறவர் பரதவர் என்னும் தொடக்கத்தினும் அக்குலத்தாராகிய குறுநில ம ன்னர் மாட்டும் உளராவரன்றே ; அவரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடி.

னும் உயர்ந்த தலைமகனும் தலைமகளு [மாயினோர்] மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாத மாட்டும் அவ் விழிமரபினையே சுட்டியுணராகிற்குமாதலான் என்றவாறு.

'காரரப் பெய்த' என்னும் முல்லைக் கலியுள் [கலித்-௱க]

"மண்ணீத் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணிலார் புண்ணுக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ வாயர் மகள்."

என ஐயமின்றிச் சுட்டியுணர்ந்தவாறு காண்க.

இனி உயர்புள்வழி ஐயம் நிகழுமாறு:

"உயர்மொழிக் கிளவி யுறழுங் கிளவி
யையக் கிளவி யாடூஉவிற் குரித்தே."

[பொருளியல்-சஙு]

என்றாராகலின், ஐயப்படுவோன் தலைமகன் என்று கொள்க. தலைமகள் ஐயப்பட தென்னையெனின், அவள் ஐயப்படுங்கால் தெய்வமோ வென்று ஐயுறல் வேண்டு அவ்வாறு ஐயுற்றால் அச்சம் வரும். அது ஏதுவாகக் காம நிகழ்ச்சி யுண்டாகாது? (

௬௨. வண்டே யிழையே வள்ளி பூவே
கண்ணே யலமர லிமைப்பே யச்சமென்

றன்னவை பிறவு மாங்க ணிகழ
நின்றவை களையுங் கருவி யென்ப.

என்—னின், ஐயப்பட்டான் துணிதற்குக் கருவி உணர்த்துதல் நுதலிற்று.

எண்ணப்பட்ட வண்டு முதலாகிய எட்டும் பிறவுமாகி அவ்விடத்து நிகழாநி
ஐயம் களையும் கருவி என்றவாறு.



ஐயமென்பது அதிகாரத்தான்வந்தது. 'நிகழா நின்றவை' என்பது குறுகின்றது
பண்டாவது, மயிரின் அணிந்த பூவைச் சூழும் வண்டு. அது பயின்றதன் மேலல்ல,
செவ்வாமையின் அதுவும் மக்களுள்ளாளென்றறிதற்குக் கருவியாயிற்று. இழையென்ப,
அணிகலன். அது செய்யப்பட்டதெனத் தோற்றுதலானும் தெய்வப்பூண் செய்யா அல
ாதலானும் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. வள்ளி என்பது முலையினும் தோளினு
எழுதிய கொடி. அதுவும் உலகின் உள்ளதாகித் தோன்றுதலின் (அதுவும்) கருவியாயிற்
புலமரல் என்பது தடுமாறுதல். தெய்வமாயின் நின்றவழி நிற்கும். அவ்வாறன்றி, நின்று
ற்கின்றிலள் என்று சுழற்சியும் அறிதற்குக் கருவியாயிற்று. இமைப்பென்பது கண்
மைத்தல். தெய்வத்திற்குக் கண் இமையாமையின் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்
அச்சமென்பது ஆண் மக்களைக்கண்டு அஞ்சுதல். அது தெய்வத்திற்கு இன்மையான் அ
யும் அறிதற்குக் கருவியாயிற்று. அன்னவை பிறவும் என்றதனுன் காணிலத்தோய்தல
வியர்த்தல், நிழலா[டு]தல் கொள்க. இவை கருவியாகத் துணியப்படும் என்றவாறு.

காட்சி முதலாகிய இத்துணையும் கைக்கிளைக் குறிப்பாம். இதற்குச்செய்யுள் வந்
வழிக்காண்க. இனிக் குறிப்பறிதல் கூறுகின்றாராகலின், அக்குறிப்பு நிகழும்வழி இவை
இயல்லாம் அகமாம், என் னை? இருவர்மாட்டு மொத்த நிகழ்ச்சி
யாதலான். இவை தலைமக ாட்டுப் புலப்பட நிகழாது
ஆண்டுக்குறிப்பினுற் சிறிது நிகழுமென்று கொள்க.

அவை வருமாறு:—

"உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று." [குறள்-ஞகம]

ணவரும். பிறவும் அன்ன.

(௪

## சுங. நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக் கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.

என்—னின், மேல், தலைமகளை இத்தன்மையள் எனத் துணிந்த தலைமகன் குறிப்ப
ாது சாரலுறின் பெருந்திணைப்பாற்படு மாகலானும், இக் கந்திருவநெறிக்கு ஒத்த உ
'த்தாராதல் வேண்டுமாதலானும், ஆண்டு ஒருவரோடொருவர் சொல்லாடுதல் மரப
மையானும், அவருள்ளக் கருத்தறிதல்வேண்டுதலின், அதற்குக் கருவியாய உணர்த்துத
தலிற்று.

நாட்டமிரண்டும் என்பது—தலைமகன் கண்ணும் தலைமகள் கண்ணும் என்றவா
றிவுடம்படுத்தற்கு என்பது—ஒருவர் வேட்கைபோல இருவர்க்கும் வேட்கை உளதாகு
காலோ எனக் கவர்த்து நின்ற இருவரது அறிவினையும் ஒருப்படுத்தற்கு என்றவா
ட்டியுரைக்குங் குறிப்புரையாகும் என்பது—தமது வேட்கையொடு கூட்டி ஒருவ
ருவருக்கு உரைக்கும் காமக்குறிப்புரையாம் என்றவாறு.

இதன் பொழிப்பு:—இருவர்க்குங் கவர்த்து நின்ற அறிவை ஒருப்படுத்த
பாருட்டு வேட்கையொடுகூட்டிக் கூறுங் காமக்குறிப்புச்சொல் இருவரது நாட்டமாகு
ன்றவாறு.

ஆகும் என்பதனை நாட்டம் என்பதனொடு கூட்டியுரைக்க. இதற்குச்செய்யுள்:—

"பானலந் [1]தண்கழிப் பாடறிந்து தன்னையர்
ஈனல நுண்வலையாற் கொண்டெடுத்த—கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்க ணோக்கங்
கடிபொல்லா வென்னையே காப்பு." [திணைமாலை-௩௨]

ண்ணினன் அறிப என்றவாறு. (இ

## சுச. குறிப்பே குறித்தது கொள்ளு மாயி

ஞங்கலை நிகழு மென்மனுர் புலவர்.

என்—னின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.
ஒருவர்குறிப்பு ஒருவர் குறித்ததனைக் கொள்ளுமாயின், அவ்விடத்துக் கண்ணினு வருங் குறிப்புரை நிகழும் என்றவாறு.

எனவே, குறிப்பைக் கொள்ளாதவழி அக்குறிப்புரை நிகழாது என்றவாறும். இ ஹற்சொல்லியது கண்டகாலத்தே வேட்கை முந்துற்றவழியே இக்கண்ணினுன் வரு தறிப்பு நிக்ழ்வது: அல்லாதவழி நிகழாது என்றவாறு. இனிக் குறிப்பு நிகழுமாறும் அத் வேறுபாடும் மெய்ப்பாட்டியலுள் கூறுப. ஈண்டும் சில உதாரணம் காட்டுதும்.

"நோக்கினு ணோக்கி யிறைஞ்சினு ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்." [குறள்-௲௯௩] எனவும்,

" அசையியற் குண்டாண்டோ ரேஎரியா
ஞேக்கப்
ப்சையினள் பைய நகும்." [குறள்-௲௯௮]

எனவும் வரும். பிறவு மன்ன.

தலைமகன் குறிப்புத் தலைமகள் அறிந்தவழியும் கூற் நிகழாது, பெண்மையான்.

(

கூ௫. பெருமையு முரனு மாடூஉ மேன.

என்—னின், இது தலைமகற்கு உரியதோர்
இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

பெருமை யாவது—பழியும் பாவமும் அஞ்சுதல்.
உரன் என்பது—அறிவு.

இவை யிரண்டும் ஆண்மகனுக்கு இயல்பு என்றவாறு.

இதனானே மேற் சொல்லப்பட்ட தலைமகளது வேட்கைக்குறிப்புக் கண்ட த மகன், அந்நிலையே புணர்ச்சியை நினையாது, வரைந்து எய்துமென்பது பெறுதும்:

"சென்ற விடத்தாற் செலவிடா
தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு." [குறள்-௪௨௨]

என்பவாகலின். தலைமகன் இவ்வாறு கூறியதற்குச் செய்யுள்:—

"வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
மான்வென்ற மடநோக்கின் மயிலியலாற் றளர்பொல்கி
யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி
யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுங்

தெரிகல்லா விடையின்கட் கண்கவர்
பொருங்கோட

வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி;

பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்கண்
ணேந்துகோட் டெழில்யானை [1]யொன்னுதார்க் கவன்வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ சின்மொழி;

1. யெண்ணுதார்க் (பி-ம்).

ரசுக்

## தோல்காப்பியம் - இளம்பூரணம்

பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
[1]பிணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்;

வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேற்

றகையிண ரிளவேங்கை மலரன்ன சுணங்கிணைய்
மதவலி கமழ்கடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை;
எனவாங்கு,
இனையன கூற விறைஞ்சுபு நிலநோக்கி
நினைகுபு கெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாலக்குப் பெயர்ந்தாளெ னறிவகப் படுத்தே."

[கலித்-௫௭]

"உறுகழி மருங்கி னோதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற் கண்போன் மாமலர்ப்
பெருந்தண் மாத்தழை யிருந்த வல்குல்
லைய வரும்பிய சுணங்கின் வையெயிற்று
மையீ ரோதி வாணுதற் குறமகள்
விளையா டாயமொடு வெண்மண லுருத்த
புன்னை நுண்டாது பொன்னி னுண்டு
மனைபுறந் தருதி யாயி னெனைய தூஉ
மிம்மனைக் கிழமை யெம்மொடு புணரிற்
றீது முண்டோ மாத ராயெனக்
கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென வியக்க
யாந்தற் குறுகின மாக வேந்தெழி

வரிவே யுண்கண் பனிவர லொடுக்கிச்
சிறிய விறைஞ்சின டலையே
பெரிய வெவ்வம் [4]யாமிவ ணுறவே." [அகம்-உ௩ய]

இவை உள்ளப்புணர்ச்சியான் வரைதல் வேண்டிப்

பாங்கற்கு [5] உரைத்தன.

௬௪. அச்சமும் நாணு மடனு முந்துறுத

னிச்சமும் பெண்பாற் குரிய வென்ப.

என்—னின், இது தலைமகட்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்

அச்சமும் நாணும் பேதை[மை]யும் இம்மூன்றும்

நாடோறு முந்துறுதல் பெ[ண்]டிர்க்கு இயல்பு என்றவாறு.

---

(பிரதி.)— 1. 'புணையமை யாய்மான்றே'. 2. 'யருந்த'. 3. 'வெவ்வமொ
4. [illegible] 5. [illegible]

[illegible]

எனவே, வேட்கையுற்றுழியும் அச்சத்தானுதல் நாணுனுதல் மடத்தானுதல் புணர்ச்
சிக்கு இசையாதுநின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது போந்தது. இவ்வாறு இருவருட்
களப்புணர்ச்சியால்நின்று வரைந்தெய்தி மெய்யுறும். இதற்குச் செய்யுள்:—

"தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்
புல்லினத் [தாயர்] மகளிரோ டெல்லா

மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்த[1]றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ

ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யையப் பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்

றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா[2]றியான்பெயர்ப்ப

வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்." [கலித்-௱௧௧]

இது தலைமகள் உள்ளப்புணர்ச்சியின் உரிமைபூண்டிருந்தவாறும் வரைந்தெய்,
கூறலுற்றவாறும் காண்க.

சூஎ. வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

என்—னின், மெய்யுறுபுணர்ச்சி நிகழுங்காலம் உணர்த்துதல் நுதலிற்று.

மேல், "பெருமையு முரனு மாடூஉ மேன." எனவும்,

"3அச்சமும் நாணு மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப."

(பிரதி)— 1. 'நகைபெருதகைஇய'. 2. 'நியான் பெயர்'. 3. 'அச்சமு நாணு
பெண்பாலன'.

னவும் ஓதியவதனுன் உள்ளஞ் சென்றவழியும் மெய்யுறுபுணர்ச்சி வரைந்தெய்தி நிகழ்
வன்றாராம். அவ்வழிச் சாக்காடெல்லையாகிய மெய்ப்பாடுவரின் மெய்யுற்றுப் புணர
றுமென்பது உணர்த்திற்று.

வேட்கைமுதலாகச் சாக்காடு ஈறாக ஓதப்பட்ட காமச்சிறப்புடையனவாற்றாவு ஆமென்று சொல்லுவர் என்றவாறு.

ஆனும் ஆறும் எஞ்சி நின்றன. இவற்றை அவத்தையென்ப. அஃதேல், அவை[ப]ளவன்றே; ஈண்டுரைத்தன வெ[ா]ன்பதாலெனின், காட்சி விகற்பமுங் கூறினு

ஃது உட்படப் பத்தாம். காட்சி விகற்பமாகிய ஐயமுந் துணிவும் முதலது: வேட்கை ரண்டாவது: என்று கொள்க.

வேட்கை யாவது—பெறல்வேண்டு மென்னும் உள்ளநிகழ்ச்சி.

ஒருதலையுள்ளுத லாவது—இடைவிடாது நினைத்தல்.

"உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்
றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி
லார நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." [குறுந்-உஅசு]

மெலிதலாவது—உண்ணாமையான் வருவது.

ஆக்கஞ்செப்ப லாவது—உறங்காமையும் உறுவவோதலும்

முதலாயின கூறுதல்.

> "ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
> வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்க
> ணுரவுக்கட லொலித்திரை போல
> விரவி னானுந் துயிலறி யேனே."

[ஐங்குறு-௱எ௨] எனவரும்.

நாணுவரையிறத்த லாவது—நாண் நீங்குதல்.

> "காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
> யானோ பொறேனிவ் விரண்டு."

[குறள்-௲௨௱௪௭]

நோக்குவ வெல்லாம் அவையே போறலாவது—தன்னாற் காணப்பட்டன வல்லாந் தான் கண்ட உறுப்புப்போலுதல்.

> " ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங்
> காந்தட் கிவரும் கருவிளம் பூக்கொள்ளு
> மாந்தளிர் கையிற் றடவரு மாமயில்
> பூம்பொழி னோக்கிப் புகுவன

பின்செல்லுந்

> தோளெனச் சென்று துளங்கொளி வேய்தொடு
> நீள்கதுப் பிஃதென நீரற லுட்புகும்." என்றாற்போல்வன.

மறத்தல்—பித்தாதல். மயக்கமாவது—மோகித்தல். சாக்காடு—சாதல். இவற்
ன் சாதல் பத்தாம் அவத்தையாதலால் ஒழிந்த எட்டுங் களவு நிகழ்தற்குக் காரணமாய்
ற்று கொள்க. இது தலைமகட்கும் தலைமகற்கும் ஒக்கும். இவற்றிற்குச் செய்யுள் வந்த

மபாருள தகாரம - களவ'யல
ரச்

கூஅ. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்த
னன்னய முரைத்த னகைநனி யுறாஅ
வந்நிலை யறிதன் மெலிவுவிளக் குறுத்த
றன்னிலை யுரைத்த றெளிவகப் படுத்தலென்
றின்னவை நிகழு மென்மனார் புலவர்.

என்—னின், இஃது இயற்கைப் புணர்ச்சிக் குரியதோர் திறன் உணர்த்துத ¹தலிற்று.

தனியினுல் தலைமகளை யெதிர்ப்பட்ட தலைமகன் தனது பெருமையும் அறிவும் நீக் 'வட்கைமீதூரப் புணர்ச்சி வேண்டினனாயினும், தலைமகள்மாட்டு நிற்கும் அச்சமும் நாணு டனும் நீக்குதலும் 1வேண்டுமன்றே. அவை நீக்குதற்பொருட்டு இவையெல்லாம் நிக( )மன்பது. உலகத்துள்ளா ரிலக்கணமெ ல்லாம் உரைக்கின்று ராகலின், இவ்வாசிரிய ரைக்கின்றவாற்றான் நிகழ்தல் பெரும்பான்மை யாகவும்,

"சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி

" [தொல். களவியல்-௰௧ ன ஓதுதலின், இவையெல்லாம் நிகழ்தலின்றிச் சிறுபான்மை வேட்கைமிகுதியா னச்சி கடிதின் முடியவும் பெறுமெனவுங் கொள்க.

முன்னிலையாக்கல் என்பது—காமக்குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கையாற் சாரநினைத்தவழித் தலைமகளும் வேட்கைக் குறிப்புடையா ளாயினும் குலத்தி ழிவந்த இயற்கையன்மையான் நாணமும் அச்சமும் உயீதூர அக்குறிப்பில்லாதாரை பால் நின்றவழி அவளை முன்னிலையாகப் படுத்துச் சில கூறுதல்.

"ஒள்ளிழை மகளிரொ டோரையு மாடாய்
வள்ளிதழ் நெய்தற் றொடலையும் புரியாய்
விரிபூங் கான லொருசிறை நின்றோ
யாரை யோநிற் றொழுதனம் வினவுதுங்
கண்டார் தண்டா நலத்தை

தெண்டிரைப்

பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை

யணங்கோ

விருங்கழி மருங்கி னிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை

யென்றனெ ன[த]னெதிர்

முள்ளெயிற்று முறுவலுந் திறந்தன
பல்லிதழ் மழைக்கணும் பாசவாற் பனியே." [நற்றிணை-௱௫௫]

சொல்வழிப் படுத்தலாவது—தான் சொல்லுகின்ற சொல்லின்வழி அவள் நிற்பாறு படுத்துக் கூறுதல்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்

திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமம் [3]கைம்மிகிற் றாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்

(பிரதி)—1. 'வேண்டு மென்றே'. 2. 'மீதார நின்றார்'. 3. 'கைமிக்குறும்'



கண்ணே கதவ வல்ல நண்ணா
ரரண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த

வடுபோர்ச் செழியன்

பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா

லணங்கே." [நற்றிணை-௩௯]

**நன்னய முரைத்த** லாவது—தலைமகளினது நலத்தினை யுரைத்தல்.

"சேரன் மடவன்னஞ் சேரன்னடை

யொவ்வாய்

சேரன் மடவன்னஞ் சேரன்னடை

யொவ்வா

யூர்திரை வேலி யுழக்கித் திரிவாள்பின்
சேரன் மடவன்னஞ் சேரன்னடை யொவ்வாய்."[சிலப்.கானல்-௨௩

நகைநனியுறாஅ அந்நிலையறித லாவது—தலைமகன் தன் நன்னயமுரைத்தலை கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வாற் புறந்தோன்றும் முறுவ குறிப்பு மிக்குத்தோன்றா அந்நிலையினைத் தலைவன் அறிதல்.

"மாணிழை பேதை நாறிருங் கூந்த
லாணமு மில்லா ணீருறை சூருடைச்
சிலம்பிற் கணங்காய் முயன்ற செறிய
ஞெதும ஞேக்கைக் காண்மோ நெஞ்சே
வறிதான் முறுவற் கெழுமிய
நுடங்குமென் பணைவேய் சிறுகுடி யோளே."

**மெலிவு விளக்குறுத்த** லாவது—தலைவன் அகத்துறும் நோயாற் புறத்து நிகழு வர்வினைக் குறிப்பான் எடுத்துக்கூறலும். உதாரணம் வந்துழிக் காண்க.

**குறிப்பாவன புறத்துறுப்பா யவர்க்[1]கின்றியமைவன.**

தன்னிலை யுரைத்த லாவது—அப் புறநிகழ்ச்சியின் பொலிவிழவைக் கண்ட தலை
கண்மாட்டுத் தலைவன் தன் உள்ள வேட்கை மீதூர்வினை நிலைப்படக்கூறுதல்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா

யாழநின்" என்னும் நற்றிணைப்பாட்டுள்,

"காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ

... ... ... .

... ... கடைமணி சிவந்தநின்

கண்ணே கதவ வல்ல." [நற்றிணை-நுக]

எனத் தன்னிலை யுரைத்தவாறு காண்க.

தெளிவு அகப்படுத்த லாவது—தலைவன் முன்னிலையாக்கல் முதலியன கூறிட
ன்னர் இயற்கைப் புணர்ச்சியினை விழைந்து நின்றானாக, அப்புணர்ச்சியினைக் கூறுவார்
ன்னம் ஒத்தபண்புடைமை உள்ளத்து இருவர்மாட்டும் வேண்டுதலின் தலைமகள் பண்
னைத் தலைவன் அறிந்து அத்தெளிவை தன்னகப்படுத்துத் தேர்தல்.

"யாயும் யாயும் யாரா கியரோ"

என்னும் குறுந்தொகைப்பாட்டுள்,

"அன்புடை நெஞ்சந் தாங்கலந்

தனவே." [குறுந் - சய]

ன இயற்கைப் புணர்ச்சி முன்னர்த் தலைவன் தலைவியர் உள்ளம் ஒத்தபண்பினைக் கூறிய
று காண்க.

---



இதுகாறும் இயற்கைப் புணர்ச்சிக்குரிய திறன்கூறி,

மேல் இயற்கைப் புணர்ச்சி நிகழுமாறு கூறுகின்றார். அஃதேல்,
தன்னிலை யுரைத்தலைத் தெளிவகப்படுத்தலுடனிணைத்து
மெய்யுறுபுணர்ச்சி யாக்கிய பின்னர்த் தோன்றுந்
துறையாகப் படித்த[ா]லே னெனின், அது சான்றோர்
வழக்கின்றாதலானும், மெய்யுறுபுணர்ச்சி முன்,
"மெய்தொட்டுப் பயிறல்" [களவியல் -
௰க] முதலியன யாண்டும் நிகழ்ந்தே தலைவிக்கு
மெய்யுறுபுணர்ச்சி நிகழுமாதலானுந், அ தன்றென்க.

௯௯. மெய்தொட்டுப் பயிறல் பொய்பா
ராட்ட
விடம்பெற்றுத் தழாஅ லிடையூறு
கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே
பெற்றுழித்
தீராத் தேற்ற முளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பி னிருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக்
கலங்கலு
நிற்பவை நினைஇ நிகழ்பவை
யுரைப்பினுங்

குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி
யுறுப்பினு
மூரும் பேருங் கெடுதியும் பிறவு
நீரிற் குறிப்பி னிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும்
பகுதியுந் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக்
கூறலுந்
தண்டா திரப்பினு மற்றைய வழியுஞ்
சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினு
மறிந்தோ ளயர்ப்பி னவ்வழி மருங்கிற்
கேடும் பீடுங் கூறலுந் தோழி
நீக்கலி னாகிய நிலைமையு நோக்கி
மடன்மா கூறு மிடனுமா ருண்டே.

என்—னின், களவிற் கூட்டம் நான்கினிடத்தும் தலைவன் கூற்று நிகழுமாறு
காதல்மிக்கு ஆற்றாமை கையிகப்பின் தலைவனும் இயலும் கூறுதல் நுதலிற்று.

மெய் தொட்டுப் பயிற லாவது—பெருமையும் உரனுமுடைய தலைமகன் தெ
வகப்படுத்தியது காரணமாகக் காதல் வெள்ளம் புரண்டோடத், தலைவியின் மெய்யை
தீண்டிப் பயிறல்.

“தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட
வில்லுடை யிளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த

புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத்

தழுத்திக்

குருதியொடு பறித்த செங்கோல் வாளி

மாறுகண் டன்ன வுண்க



போய் பாராட்ட லாவது—தலைவியின் ஐம்பால் முதலிய கடைகுழன்று சிஉவின்றேனும் அஃதுற்றதாக மருங்குசென்று தொட்டான் ஓர்காரணம் பொய்யாகப்பனைத்து உரைத்துப் பாராட்டல்.

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின்

னைய

ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன்

னீயு

மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார
மிடர்புக் கிருகு மிடையிழவல் கண்டாய்." [சிலப். கானல் - யௌ]

இடம்பெற்றுத் தழாஅ லாவது—பொய்பாராட்டல் காரணமாத் தலைவிமாட் [1]அணிமையிடம் பெற்றுத் தழுவக்கூறல். உதாரணம்:

"கொல்யானை வெண்மருப்புங்

கொல்வல் புலிய தனு

நல்யாணர் நின்னையர் கூட்டுண்டு—

செல்வார்தா

மோரம்பி னுலெய்து போக்குவர்யான்

போகாமை

யீரம்பி னுலெய்தா யின்று."

[திணைமாலை - உஉ]

இடையூறு கிளத்த லாவது—நாணுமடன் நிலைக்களனுக் கொண்ட தலைவி த
அறிவு நலன் இழந்து ஒன்றும் அறியாது உயிர்த்தனள். அஃது ஒக்குமோ எனின், ௫
கும். புதிதாய்ப்புக்கார், ஊற்றுணர்வு என்றும்பயிலாத தம் மெல்லியன்மெய்யிற் பட அ
விழப்பினும் உடன் செக்கு உயிர்க்கும் என்க. அதுபற்றிப் புலையன் தொடு தீம்பால் போ
காதல்கூரக் கொம்பானும் கொடியானும் சார்ந்தாளைத் தலைவன் இப்பொழுது இவ்வு
யின்பிற்கு இடையூறாய் நின்மனத்தகத்து நிகழ்ந்தவை யாவென வினவுதலும்.

நீடுநினைந்திரங்க லாவது—இருவர் இயலும் ஒருங்கு இணைந்தும், தலைவி பெ
ாணுமல், பால்வழி உறுகவென எண்ணி மாற்றமுங் குறியுங் காட்டாது கண்புதை
ாளைத் தலைவன் புறமோச்சி நிற்கவும் ஆண்டும் கலக்கலாம் பொழுது கூடாமைக்கு நினைந்
இரங்கல்.

கூடுதலுறுத லாவது—இங்ஙனமாய்க் காட்சி நிகழ்வின் பின்னர்ப் புணர்ச்சி எய்

லும்.

இதுவரை இயற்கைப்புணர்ச்சியாம் காரணங்கூறி, கூடுதலுறுதலால் மெய்யு
புணர்ச்சி கூறினர். இவற்றிற்குச் செய்யுள்:

"வீழு மிருவர்க் கினிதே வளியிடை

போழப் படாஅ முயக்கு." [குறள்-௲௱அ]

இது கூடுதலுறுதல். பிற வந்துழிக்காண்க.

சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி என்பது—இயற்கைப் புணர்ச்சிக்கு
ளளாக மேற்கூறப்பட்டவற்றுடன் அவ் வின்பத் திளைத்தலையும் விரைவாக ஒன்று
பெற்ற விடத்து.

இத்தெய்வப் புணர்ச்சிக்குப் பொருள் கூறுங்கால், பயிறல், பாராட்டல், தழாஅ
லைத்தல், இரங்கல், உறுதல், நுகர்ச்சி, தேற்றம் என்று சொல்லப்பட்ட இருநான்
ளவியும் என எண்ணப்படுத்துக.

"மெய்தொட்டுப் பயிறல்" முதலாக் "கூடுத
க்கே உரிய கூறி,

லுறுதல்"வரை இயற்கைப் புணர்

"சொல்லிய நுகர்ச்சி"முதல்"இருநான்கு கிளவி"வரை இடந்தலைப்பாடும் சேர்த்
ணர்த்தினர். அற்றுயின் நுகர்ச்சியும் தேற்றமும் இயற்கைப் புணர்ச்சியன்றே, இட

லப்பாடாமாறு என்னை யெனின், நன்று கடாயினாய். மெய்யுறுபுணர்ச்சியினைப் பால்
ட்டும் நெறிவழிப்பட்டுப் பெற்றார்க்கு மெய்தொட்டுப் பயிறல் முதல் அறு துறையே
ன்றியமையாத் துறையாக, ஏனைய இரண்டும் இடந்தலைப்பாட்டிற்கும் சேர்ந்த துறை
கலின், பொதுப்பட இரண்டற்கும் நடுவே வைத்துச் செப்ப
மாக்கினாரென்க. நுகர்ச்சி ம் தேற்றமும் எனப்
பிரித்துக்கூட்டுக.

தீராத் தேற்ற மாவது—இயற்கைப்புணர்ச்சியுடன்
முடியாத தெளிவு.

"வேட்ட பொழுதி னவையவை போலுமே

தோட்டார் கதுப்பிஞ டோள்" [குறள் -
தூாடு]

ஃது இயற்கைப் புணர்ச்சித் துறையன்று;
இடந்தலைப்பாட்டின்கண் தலைமகன் கூறியது
கர்ச்சி பெற்றது.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள." [குறள் - தூாக]
ன்பதோ எனின், இயற்கைப்புணர்ச்சிக்கண் நுகர்ச்சி யுற்றமை கூறிற்று என்க.

"எம்மணங் கினவே மகிழ்க முன்றி
னனைமுதிர் புன்கின் பூத்தாழ்
வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர்
களந்தொறுஞ்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
வெக்கர் நண்ணய லெம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர
மகளிரோ டுற்ற சூளே." [குறுந் - டுந]

ஃது இயற்கைப்புணர்ச்சிப் பின்றை சொற்ற தீராத்தேற்ற வுரை. "இன்னிசை யுரு
மாடு" என்னும் அகப்பாட்டின்,

"நின்மார் படைதலி னினிதா கின்றே
நும்மில் புலம்பா னுள்ளுதொறு நலியும்"

[அகம் . ருஅ]

ன்றது இடந்தலைப்பாட்டில் சேர்ந்த தேற்றம்.

"பேராச் சிறப்பின்" எட்டு என்றல்

பரும் சிறப்பின ஆறு என்றலை எடுத்தோத்தாற் காட்டி நின்றது.

இதுவரை இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும். மேல் 'வாயில்பெட்பினும்
ன்னுமளவும் பாங்கற்கூட்டம்; மேல் தொடர்பவை தோழியிற் கூட்டம்.

கஅ - ம். சூத்திர வுரையில் 'நன்னயமுரைத்தல்' என்பதன் கீழுள்ள 'சேரன்
ட்வன்னம்' என்ற செய்யுளின் இறுதியடியிலிருந்து கக-ம் சூத்திரவுரையில் 'பெற்றவழ்
ஒழிச்சியும்' என்பதன் கீழுள்ள 'சீங்கிற்றெறூஉம்' என்னும் செய்யுள் வரையும் காணுப
குதி ஏட்டுப் பிரதியிற் காணப்பெறவில்லை; காலஞ்சென்ற த. மு. சொர்ணம்பிள்ளை யவர்க
நடைய கடிதப் பிரதியில் மாத்திரம் இருந்தது; நச்சினார்க் கினியரது உரையினின்றுப
டுத்துச் சேர்கப்பட்டுளது எனக் கருதுதற்கு இடமுண்டு. இதன்பின்னர் 'ஒடுங்கீரோதி
ன்பதிலிருந்து ㅠ-ம் சூத்திரவுரை முடியவுள்ள பகுதியிற் பெரும்பாலும் ஏட்டுப் பிரதி
ற் பலவாறுகப் பிறழ்ந்து காணப்படுகின்றது. இது பொருட்டொடர்புநோக் கியொரு

பெற்றவழி
மகிழ்ச்சியும் என்பது—இடந்தலைப்பாட்டினை யொட்டி நிகழும் இன்
னைப் பெற்றவழி அகத்துத் தோற்றும் பெருமகிழ்வும்.

"நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்" [குறள் - ூாச]

"ஒடுங்கீ ரோதி யொண்ணுதற் குறுமக
ணறுந்தண் ணீர ளாரணங் கினளே
யினைய ளென்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
யணைமெல் லியல்யா முயங்குங் காலே."

[குறுந் - எ0] இவை புணர்ச்சியான் மகிழ்ந்ததற்குச்
செய்யுட்கள்.

பிரிந்தவழிக் கலங்கலாவது—இவ்வாறு கூடின
தலைமகள் பிரிந்தவழிக் கலக்

றுதலும் என்றவாறு.

"என்று மினிய ளாயினும் பிரித
லென்று மின்னா வன்றே நெஞ்சம்
பனிமருந்து விளைக்கும் பரூஉக்க ணிளமுலைப்
படுசாந்து சிதைய முயங்குஞ்

சிறுகுடிக் கானவன் பெருமட மகளே."

எனவரும்.

1இத் துணையும் இடந்தலைப்பாடு. பெற்றவழி மகிழ்தலும் பிரிந்தவழிக் கலங்கலு பாங்கற் கூட்டத்தினுந் தோழியிற் கூட்டத்தினும் நிகழும்.

**நீற்பவைநினை இ நிகழ்பவை யுரைப்பினும்**

என்பது—காமநுகர்ச்சியொன் றனை யும் நினையாது இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்குமென்று உட்கோடலு

நீற்பவை—இல்லற வினை.

"தேரோன் றெறுகதிர் மழுங்கினுந் திங்க
ளுரா வெம்மையொடு திசைநடுக்

குறுப்பினும்

பெயராப் பெற்றியிற் றிரியாச் சீர்சால்
குலத்திற் றிரியாக் கொள்கையுங் கொள்கையொடு
நலத்திற் றிரியா நாட்டமு முடையோய்
கண்டத னளவையிற் கலங்குதி

யெனினிம்

மண்டிணி, கிடக்கை மாநில

முண்டெனக் கருதி யுணரலன்

யானே." இது நிற்பவை நினைஇக் கழறியது.

---

1. இவ்விரண்டு துறையும் இடந்தலைப்பாட்டுக்கும் ஒக்குமன்றோ வெனின், பெற்று
ஒழிதலும் பிரிந்தழிக்கலங்கலும் என்பன எந்நிலத்தார்க்கும் எவ்வொழுக்கினுக்கும் எற்
ஆகலின் ஒக்குமேல், இடந்தலைப்பாட்டுக்கும் பாங்கற்கூட்டம் பாங்கியிற் கூட்டம் என்ப
வற்றுக்கும் கொள்க (த. மு. சொ.). 2. இது தொடங்கி 'இது நிற்பவை நினை

[illegible] [illegible]

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நொண்டுகொளற்

கரிதே." [குறுந் - ருஅ]

இது நிகழ்பவை உரைத்தது.

[1]குற்றங்காட்டியவாயிலாவது—தலைவன் மாட்டுச்
சோர்வானும் காதல்மிகுதியானும் நேர்வுற்ற பழிபாவங்களை
எடுத்துக்காட்டும் பாங்கன்.

பெட்பினும்—அத்தகைய பாங்கன் இவ்வியல்

பண்டைப்பால்வழியது என எண்ணி இவ்வாறு

தலைமகன் மறுத்தவழி அதற் குடன்படல். அவ்வழி, நின்னாற் காணப்பட்டாள் எவ்விடத்தாள்? எத்தன்மையாள்? எனப் பாங்கன் வினவுதலும், அதற்குத் தலைமகன் இடமும் உருவுங் கூறுதலும், அவ்வழிப் பாங்கன் சென்று காண்டலும், மீண்டு தலைமகற்கு அவள் நிலைமை கூறலு மெல்லாம் உளவாம். அவ்வழிப் பாங்கன் வினாதலும் தலைமகன் உரைத்தனவும் உளவாம். பாங்கன் வினயதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க. அவ்வழித் தலைமகன் உரைத்தற்குச்

செய்யுள்:—

"எலுவ சிறாஅ ரேமமுறு நண்ப
புலவர் தோழ கேளா யத்தை
மாக்கட லடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குந் திருநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்

றெம்மே" [குறுந் - ௱௨௯]

"கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க
வாடுமக ணடந்த கொடும்புரி நோன்கயிற்
றதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துயவுத்தலை மந்தி வன்பறழ் தூங்கக்

2கழைக்க ணிரும்பொறை யேறி
விசைத்தெழுந்து
குறக்குறு மாக்க டாளங் 3கொட்டுமக்
குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
விடுத்தற் காகாது பிணித்தவென்
னெஞ்சே." [நற்றிணை - கூ௬] இன்னும் இயற்கைப் புணர்ச்சி
புணர்ந்த தலைமகன் வரைந்தெய்தல் வேண்டிக் கூறி
யுங் கொள்க.

"முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய குரல கிழக்குவீழ்ந் தனவே
4செறிநிறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே 5யணங்குதற்

(பிரதி)— 1. இது தொடங்கி 'பண்டைப் பால்வழியது என எண்ணித்' என்பு
முடியவுள்ளது (த.மு.செர்.). 2. பறைக்க ணிரும்பொறை யேறி நின்று. 3. கொட்டு

றுிசு தோல்காப்பியம் -
ஐுளமபூரணம

கியான்றன் னறிவல் தானறி யலளே
யாங்கா குவள்கொ றூனே
பெருமுது செல்வ ஞெருமட மகளே." [குறுந் - ௩௩ள]

[இது பாங்கன் நின்னை அணங்காக்கியாள்
எவ்விடத்தவள் எவ்வியலின ளென்று வினை அறிந்தது.]

இவ்வாறு கேட்ட பாங்கன் அவ்வழிச் சென்று கண்டதற்குச் செய்யுள்:—

"இரவி ஞனு மின்றுயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
[1]தண்ணறு நெய்த ஞறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே." [ஐங்குறு - ளஎந]

என வரும்.

இச்சூத்திரத்துட் கூற்று வேண்டியவறுத்துணர்த்தாமை பாங்கற் கூற்றும் அடங்கு தப் போலும்.

பெட்ட வாயில்பெற் றிரவு வலியுறுப்பினும்

என்பது—மேற்சொல்லிய வா

றன் உடம் பட்ட பாங்கனல் தலைமகளைப் பெற்றுப் பின்னும் வரைந்தெய்த லாற்று ளவிற் புணர்ச்சி வேண்டித் தோழியை இரந்துபின்னின்று கூட்டக் கூடுவேன் என்னு உள்ளத்தனாய் அவ்விரத்தலை வலியுறுத்தினும் என்றவாறு.

வலியுறுத்தலாவது, தான் வழிமொழிந்து யாது தான் அவ்வாறு செய்குவ னென்றமை.

பெட்டவாயிலால் தலைமகளைக் கண்டு கூறியதற்குச் செய்யுள்:—

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னையர்
உடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயும்
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்
மிடல்புக் கிடுகு மிடையிழவல்

கண்டாய்." [சிலப். கானல்-௰௭]

இன்னும், பெட்டவாயில் பெற்று என்பதற்கு இரட்டுற மொழிதல் என்பதனால் தலைமகன் தான் விரும்பப்பட்ட தோழியாகி எமக்கு வாயில் நேர்வாள் இவள் எனப்பெற்று பின்னிரந்து குறையுற நினைப்பினும் என்றுமாம். அதற்குச் செய்யுள்:

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக்

கொள்ளுங்

கடைப்புணைக் கொளினே கடைப்புணைக்

கொள்ளும்

புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை

மழைக்கட்

டளிதலைத் தலைஇய தளிரன் னோளே."

[குறுந் - உ௱௨௨]

இரவு வலியுறுத்தற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

"கொண்டன் மாமழை குடக்கேர்பு
குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசே ரைம்பாற் றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்

மடபாருள் துகாபய - கவாவயல
முர6

பெருங்கண் ணய மூவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கு நிலவுமணன்
முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
யருளினு மருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா நெஞ்சே
யென்னதூஉ
மருந்துய ரவலந் தீர்க்கு
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே."
[நற்றிணை - ௱௪௰] 'ன்னும் பாட்டும் ஆம்.

இத்துணையும் பாங்கற்கூட்டம்.

ஊரும் ... ... பகுதியும் என்பது—ஊராயினும் பேராயினுங் கெடுதியாயினுட )றவாயினும் நீர்மையினல்

தன்குறிப்புத் தோன்றக் கூறித் தலைமகன் தோழியைக் குறை
றும் பகுதியு முண்டு என்றவாறு. அவற்றுள்
ஊர் வினயதற்குச் செய்யுள்:—

"அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்கும் [1]கொழுஞ்சுளைப் பெரும்பழங்
குழவிச் சேதா மாந்தி யயலது
வேய்பயி லிறும்பி ஞமறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென வெழுந்த
செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனங் காவலு நுமதோ
கோடேந் தல்கு லீரோ ளீரே." [நற்றிணை - உாமாக]

பெயர் வினயதற்குச் செய்யுள் வந்தவழிக்கண்டுகொள்க.
செய்யுள்:—
கெடுதிவினயதற்கு

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ
ழேனற்—பிறையெதிர்ந்த

தாமரைபோல் வாண்முகத்துத்
தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன் வீண்டு."
[திணைமாலை-க.]

"2இல்லுடைக் கிழமை யெம்மொடு புணரிற்
றீது முண்டோ மாத ரீரே."

என்றது பிறவாறு வினயது. பிறவுமன்ன.

தோழிதுறை ... மீடனுமாநுண்டே என்பது—தோழி குறையைத் தலைமகளை ...ார்த்தி மெய்யுறக் கூறுதலும், அமையாதிரப்பினும், மற்றையவழியும், சொல்லவட் சார்த்... ...ிற் புல்லிய வகையினும், அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடு... ...றுதலின் நீக்கலின்றிய நிலைமையும் நோக்கி மடன்மா கூறுதலு முண்டு தலைமகன்கண்...

...ண றவாறு.

தலைமகன்கண் என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது. உம்மையாற் பிறகூறுத... ...ண்டென்றவாறு. புணர்ச்சி நிமித்தமாகத் தலைமகன் இரத்தலுங் குறையுறுதலு... ...டலேறுவல் எனக்கூறுதலும் பெறுமென்றவாறு. ஈண்டு, துறையவட் சார்த்திமெ...

(பிரதி)— 1. கொடுஞ்சினைப். 2. இது தொடங்கி 'பிறவுமன்ன' என்பது முடி...

புறக் கூறல் என்றது—தோழிகூற்றுள் அருமையி னகற்சி யென்று ஓதப்பட்டு
நண்டாதிரத்த லாவது—தலைமகன் பலகாலுஞ் சென்று இரத்தல். மற்றையவ
என்பது— பின்வரவென்றல் முதலாயின. சொல்லவட்சார்த்தலிற் புல்லியவ
என்பது—மூன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துணர்த்தலென
ஓதப்பட்டது. அறிந்தே ாயிர்ப் பென்பது—பேதைமை
யூட்டல் என் ஓதப்பட்டது. கேடு கூறுதலாவது.
உலகுரைத்தொழிப்பினும் என ஓதப்பட்டது. பீடு
கூறுதலாவது—பெருமையிற் பெயர் பினும் என ஓதப்பட்டது.
நீக்கலினாகிய நிலையை என்பது— அஞ்சி யச்சுறுத்த லெ
ஓதப்பட்டது. இவையெல்லாந் தோழி கூற்றினுட்
காணப்படும்.

தோழியைக் குறையுறும் பகுதிவருமாறு:—

"தோளுங் கூந்தலும் பலபாராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் றொண்டி யன்னவெற்
கண்டு மயங்கிச் நல்காக் காலே" [ஐங்குறு – ௱௭௮]

இனி மடலேறுவல் என்பதற்குச் செய்யுள்:

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப

பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே.'' [குறுங் - யஎ]

அவ்வழித் தலைமகன் கூறிய சொற் கேட்டு, இஃது அறிவும் அருளும் நாணமுமுடையார் செய்யார் எனக் கூறியவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்:—

"நாணொடு நல்லாண்மை
பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.'' [குறள் - ௲௱௩௩]

[எனவும்,]

"அறிவிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.'' [குறள் - ௲௱௩௯]

[எனவும் வரும்.] பிறவு

மன்ன. மடன்மா கூறுது பிறகூறியதற்குச் செய்யுள்:—

"பனைத்தோட்
குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவ
ளுருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில் காப்போ ரறிதலு [1]மறியார்

முறையுடை யரசன் செங்கோல் வையத்
தியான்றற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
அளிதோ தானேயிவ் வழுங்க லூரே." [குறுந் - உஎசு]

இவ்வாறு இரந்து பின்னிற்றலும் மடலேறுவல் என்றலும் கைக்கிளை பெருந்திணைப் பா படுமோ எனின், அவ்வாறு வருவன அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாமா வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

(ய)

---

பொருளதிகாரம் - களவியல்

ரு

ரு. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று
மெலியினு
மன்புற்று நகினு மவட்பெற்று
மலியினு
மாற்றிடை யுறுதலு மவ்வினைக்
கியல்பே.

என்—னின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

மேல் தலைமகன் 'மடன்மா கூறு மிடனுமா ருண்டே' என்றார். இஃது அவ்வ டன்மா கூறுதற்கு நிமித்தமாகிய நீக்கத்தினை மாறுபட்டுக் கூறுத் தலைமகள் இயல்பை றிப்பெயர்ப்பினும், அஃதறிந்து தா முடன்படத் தலைமகன் வருத்தத்தினன் மெலிகின்மை கூறிய விடத்தினும், தலைமகன் குறையை மறுப்புழி அன்பு தோன்ற [நக் டத்தும்,] தோழி உடன்பாடுற்றவழியும், தலைமகனும் மேற் சொல்லப்பட்ட மடன்ப றுதல் இடையூறு படுதலும் தோழியிற் கூட்டத்திற்கு இயல்பு என்றவாறு.

உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

பண்பிற் பெயர்ப்பினும்— தலைமகள் இளமைப்பண்பு கூறிப் பெயர்த்தவழி லைமகன் கூறியது. அதற்குச் செய்யுள்:—

> "குன்றக் குறவன் காதன் மடமகள்
> வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
> வளையண் முளைவா ளெயிற்ற
> ளிளைய ளாயினு மாரணங் கினளே."

[ஐங்குறு - உ௱௫௬]

பரிவுற்று மெலியினும்—[பரிந்த வுள்ளத்துடன் மெலிதலுறுதலும்.] பரிவுற்று 'தாழி மெலிதலாவது 'உடம்பவெளியாள்' என்றாற்போல வருவது. அவ்வழித் தலைமக -ற்று:—

"தொடலைக் குறுந்தொடி தந்தாண்

மடலொடு

மாலை யுழக்குந் துயர்." [குறள்

- ௲௱௩௫]

அன்புற்று நகினும்—[அன்பு தோன்றும் உள்ளத்துடன் நக்காலும் 'கழும்.] அன்புற்று நக்கவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்:—
கூற்.

"நயனின் மையிற் பயனிது வென்னாது
பூம்பொறிப் பொலிந்த வழலுமி

ழகன்பைப்

பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது
தகாஅது வாழியோ குறுமக ணகாஅ
துரைமதி யுடையுமென் னுள்ளஞ் சாரற்
கொடுவிற் கானவன் கோட்டுமா

தொலைச்சிப்

பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த 1வாயிழை மழைக்க
ணுாறாஅ நோக்க முற்றவென்
பைத னெஞ்ச முய்யு மாறே." [நற்றிணை - எ௫]

அவட்பெற்று மலியினும்—தோழி உடம்பாட்டினைப் பெற்று மகிழல். இரட்டு
மொழிதலான் தலைமகளை இருவகைக்குறியினும் பெற்றுமகிழினும் என்றும் கொள்
தாரணம்:—

(பிரதி)— 1. மாயிதழ். 2. இது தொடங்கி 'இது அவட் பெற்று மலியுந் தலை
ன் கூற்று' என்பது முடியவுள்ளது (த. மு. சொ.).



"எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ளன்னுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே." [ஐங்குறு - ௱எ௰]

இது அவட்பெற்று மலியுந் தலைவன் கூற்று.

இனி, உள்ளப் புணர்ச்சியா னின்றி யியற்கை யிடையீடுபட்டுழி, பின் தலைமக
றியிடங் கூறியவழி யதனைப் பாங்கற் குரைத்தற்குச் செய்யுள்:—

"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின ளுணங்கிழைப்

பொங்கரி பரந்த வுண்க
ணங்கலிழ் மேனி யசையிய லெமக்கே." [ஐங்குறு - ௱எ௪]

னவுஞ் சிறுபான்மை வரும்.

"1காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று." [குறள் - ௲௱௰௪]

இது தலைவியைப் பகற்குறிக்கண்பெற்று மலிதல்.

"மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்." [குறள் - ௲௱௰௬]

இஃது இரவுக்குறிக்கண்

தலைவன் அவட்பெற்று மலிர்ந்தது.

"மாதர் முகம்போ லொளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி." [குறள் - ௲௱௰௮]

ன்பதும் அது.

ஆற்றிடை உறுதலும்—தான்சேறும் ஆற்றிடை இடையூறு உண்டாய விடத்து
டற்று நிகழும். இரட்டுற மொழிவான் வரைவிடைவைத்துப் பிரிந்தான் தான் சேற
யூற்றின்கண் வருத்தமுற்றுக் கூறலும் கொள்ளப்படும்.

"குருதி வேட்கை யுருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கு
மரம்பயில் சோலை மலியப் பூழிய
ருருவத் துருவி னுண்மேய லாரு
மாரி யெண்கின் மலைச்சுர நீளிடை
நீயந்து வருத லெவனெனப் பலபுலந்
தழுதனை யுறைமு மம்மா வரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக்
குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்
னாய்நல முள்ளி வரினெமக்
கேம மாகு மலைமுத லாறே." [நற்றிணை -
௱௯௨] இந் நற்றிணைப்பாட்டு தலைவி ஆற்றினது அருமை

ணு தல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு மூண்ட[த்]தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா
ணிலங்குபிறை யன்ன விளங்குவால்

வையெயிற்

றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு

புரிசடை

[3]முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் [4]பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
[5]றாவி றாணிழற் றவிர்ந்தன்றா லுலகே."

[அகம்-கடவுள்வாழ்த்து]

(பிரதி)—1. மிசையுமன். 2. அங்கம். 3. முதிர்ந்த. 4. யர்வரும் பிறரு. 5. றாவின்



இதற்குக் கொன்றையாலமைந்த தாரினனும் மாலையனும் கண்ணியனும் நன்
நாண் மார்பினனும் இமையா நாட்டத்து நுதலினனும்க் கணிச்சியு மழுவு மூவாய் வேலு
ந்திய கையினனும் யாவர்க்குந் தோலாதோனுமாய்
எற்றினையு மூர்ந்து உமையாளையுஞ் சர்ந்து செவ்வானன்ன
மேனியையும் பிறைபோன்ற எயிற்றினையும் எரிபோன்ற

சடை
னையும் திங்களொடு சுடருஞ் சென்னியையு[மு]டையனுய் மூவாவமரர் முதலிய யா[வ]ரு றியாத் தொன்முறை மரபினனுய்ப் புலியதளை யு முடுத்த யாழ்செழு மணிமிடற்றந்தன ரது சிவானுபூதியிற் பேருலகர் தங்கிற்று எனப்பொருள் உரைக்குங் காலத்து அதன்கண் )டைக்கிடந்த சொற்கள் முன்னெடுபின் வாய்பாடுகள் சேராதன்றே; அவ்வழி அவ்வாய ராட்டாற் போந்த பொருளுரைப்பச் சேர்ந்தவாறும் இசைதிரித் திசைத்தவாறும் அவை த்தம் நிலையிற் குலையாமை நின்று பொருள்பட்டவாறுங் கண்டுகொள்க.

"ஊரொரா ருற்றபின் னெல்காமை

யிவ்விரண்டி

னென்ப வாய்ந்தவர் கோள்." [குறள் - சுசுஉ]

இதுவும் இரண்டென்னுந் தொகைக்கு 'ஊரொராமை' எனப்பொருள் உரைக்க வேண்டும். (க

௩௪௪. நோயு மின்பமு மிருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
வெட்டன் பகுதியும் விளங்க வொட்டி[ய]
வுறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன்
மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு

புணர்த்துஞ்

சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியு
மவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியு
[1]மறிவும் புலனும் வேறுபட நிறீஇ
யிருபெயர் மூன்று முரிய வாக
வுவம வாயிற் படுத்தலு முவம
மொன்றிடத் திருவர்க்கு முரியபாற் கிளவி.

என்-னின், ஒருசார் காமப்பொருண்மைபற்றி நிகழ்வதோர் இளவி யுணர்த்திற்ப

நோயு மின்பமு மிருவகை நிலையிற் காமங் கண்ணிய மரபிடை தெரிய வெ
ன் பகுதியும் விளங்க வொட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோ
றுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்தும் என்பது—துன்பமும் இன்பமு
கிய இருவகை நிலையினையுமுடைய காமத்தைக் குறித்த மரபு இடையீடுபடுதலா
மெய்ப்பரிவு எட்டாகிய எட்டன் பகுதியும் விளங்கப் பொருந்திய உறுப்புடையது போ
ம் உணர்வுடையது போலவும் மறுத்துரைப்பது போலவும் நெஞ்சொடுபுணர்த்துக் கூ
ம் என்றவாறு.

'காமங்கண்ணிய' என்றதனல் அகப்பொருளாகிய காமமும் புறப்பொருளாகி
ாமமும் கொள்ளப்படும். 'இடைதெரிய' என்பதனை

... ... —இன்பம்
'இடைதெரிந் தின்னுமை நோக்கி மனையா
றடைவொழிந்தா ரான்றமைந் தார்'' [நாலடி - ருச]

ாா அகா ... மதாலகாபபயய -

[illegible]

என்றாற் போலக் கொள்க. 'தெரிய' என்னும் செயவெனெச்சம் ஏதுப்பொருள
மை குறித்துநின்றது. மெய்ப்பாடு எட்டாவது:—நகை, அழுகை, உவகை, இளிவரல்
அச்சம், பெருமிதம், மருட்கை, வெகுளி: இவற்றின்பகுதி மெய்ப்பாட்டியலுட் காண்
ம் மெய்ப்பாடு உறுப்புடையது போலச் சொல்லப்பட்ட நெஞ்சின்கட் புலப்ப
ன்றவாறு.

சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச் செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்
ம் என்பது—சொல்லாத மரபினையுடையவற்றொடு கெழுமி யவை செய்யாத மரன
ாண்டுப் படுத்தி யவற்றையும் நெஞ்சினைப்போல அடக்கியும் என்றவாறு.

சொல்லாமரபின வாவன—புள்ளும், மாவும், மரனும், கடலும், கானலும் முதல
ின. செய்யா மரபாவன—தூதாச் சேறலும் வருதலும் உளபோலக்கூறும் அவைபோ
ன வும் பிறவும்.

அவரவ றுறுபிணி தமபோற் போற்றியும் என்பது—யாவர்சிலர் யாதொ
பிணியுற்றார் அவருற்ற பிணியைத் தாமுற்ற பிணிபோலச் சேர்த்தியும் என்றவாறு.

'அவரவர்' என்பது உயர்திணையாய்க் கூறினும்

இருதிணையுங் கொள்ளப்படும்:

> "ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
> வருவகை தானே வழக்கென மொழிப." [பொருளியல் - உஎ]

என்பதனால்.

அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இருபெயர் மூன்று முரிய வாக வுவம வாயி
படுத்தலும் உவமம் ஒன்றிடத்து என்பது—அறிவையும் அறியப்படும் பொருளை
வேறுபட நிறுத்தி இருவகைப்பட்ட பெயரும் மூவகைப்பட்ட பொருட்கும் உரித்த
உவமம் பொருந்து மிடத்து உவமவாயிற் படுத்தலும் என்றவாறு.

வேறுபட நிறுத்தலாவது—தத்தம் நிலைமை யொழியவென்றவாறு. இருபெய வது—உவமைப்பெயரும் உவமிக்கும் பெயரும். மூன்றும் உரியவாகும் என்பது—தொ லும் பண்பும் பயனும். 'உவமம் ஒன்றிடத்து' என்றதனை மொழிமாற்றுக.

இருவர்க்கும் உரியபாற் கிளவி என்பது—தலைமகற்குந் தலைமகட்கும் உ வொருகூற்றக் கிளவி என்றவாறு.

அவற்றுள் நெஞ்சொடுபுணர்த்தற்கு உதாரணம்:—

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்தன்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே." [அகம்-௯]

என்பது உறுப்புடையது போல உவமைபற்றி வந்தது.

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
கூமந் கபின் சென்றவென் னெஞ்சு." [முத்தொள்ளாயிரம்]

இது அவலம்பற்றி நெஞ்சினை உறுப்புடையதுபோற் கூறிய பெண்பாற் கூற்று.

"உள்ளம் [1]பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல தீர்கஞ் செல்வா [2]மென்னும்" [நற்றிணை - உஅ௪]

என்றவழி உணர்வுடையது போல் இளிவரல் பற்றிவந்த தலைமகன் கூற்று.

"குறுகிலைக் குரவின் சிறுநனை நறுவீ
[3]வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
[4]கண்களி பெறூஉங் கவின்பெறு காலை
யெல்வளை [5]நெகிழ்த்தோற் கல்ல லுறீஇயர்
சென்ற நெஞ்சஞ் செய்வினைக் குசாவா
தொருங்குவர னசையொடு வருந்துங் கொல்லோ
வருளா னாகலி னழிந்திவண் வந்து
தொன்னல னிழந்தவென் பொன்னிற நோக்கி
யேதி லாட்டி யிவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை யிழந்தே."
[நற்றிணை - ருசு]

இது உணர்வுடையது போல் இளிவரல் பற்றி வந்த தலைமகள் கூற்று.

"நின்மொழி கொண்டியானோ விடுவெனென் மொழிகொண்
[டெ]டன்னெஞ்ச மேவல் செயின்." [கலித் - ௱௰௩] இது மறுத்துரைப்பது போல் தலைமகன் கூற்று: உவகைபற்றி வந்தது.

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது." [குறள் - ௲உ௱௯௧]
இதுவும் மறுத்துரைப்பது போற் றலைவி கூற்று: இளிவரல் பற்றி வந்தது.

"இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்றவென் னெஞ்சு" [அகம் - ௱௨௯]

இஃது அச்சம்பற்றி வந்தது. பிறவு மன்ன.

சொல்லாமரபி னவற்றொடுகெழீஇச் செய்யாமரபிற்
ான்ப[தற்குச் செய்யுள்]—

றொழிற்படுத் தடக்கிய

"கான லுங் கழறாது கழனியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநீ யல்ல தறுதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் கழிசிறந்து
பறவை கிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால்." [அகம் - எஎ0]

என்பது தலைவிகூற்று. தலைவன்கூற்று வந்தவழிக் காண்க.

(பிரதி)—1. துணிகொண். 2. மொனினும். 3. வண்டுக்க நாற்ற மவள்கை
4. நெடும்கோ ரகல வரீஇயர்



அவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியதற்குச்
செய்யுள்:—

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
துவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிறம்
நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையை
யோநீ." [கலித் - ௱௨௧]

பிறவு மன்ன.

அறிவும் புலனும் வேறுபட

நிறீஇ உவமவாயிற் படுத்தற்குச் செய்யுள்:—

"ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங்
காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு
மாந்தளிர்க் கையிற் றடவரு மாமயில்
பூம்பொழி லேக்கிப் புகுவன பின்செல்லும்
தோளெனச் சென்ற துளங்கொளி வேய்தொடும்
நீள்கதுப் பிஃதென நீரற் றறல்புகும்
வாளொளி முல்லை முகையை
முறுவலென்
றுள்வலி மிக்கா னஃதறி கல்லான்"

இவை இடையுங் கையு முதலாகிய வுறுப்புக்களைப் பற்றிய உவமவாயிற் படுத்த
ம் அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி யுவமம் பொருந்தியவழி
.றியவாறு காண்க. வேயைத் தோள்போலு மென்னாது தோளென்று தொட்டமையா
றியப்படும் பொருள் வேறுபட்டது. அதனைத் திரியக் காண்டலால் அறிவு வேறுபட்ட
த்துங் களியும் போல் முலையெனச் சென்று வேயைத்தொடும் என்னாது தோளென
சென்று வேயைத் தொட்டமையால் உவம மொன்றியவழி உவமவாயிற் படுத்தது. (உ

௱௯௫. கனவு முரித்தா லவ்விடத் தான.

என்-னின், இதுவுங் காமம் இடையீடுபட்டுழி வருவதோர் பொருள்வேறுபாடுணர்த்திற்று.

மேற்கூறியவாற்றால் காமம் இடையீடுபட்டுழிக் கனாக் காண்டலு முரித் தென்றவாறு.

இது தலைமகற்குந் தலைமகட்கு முரித்து.

"இன்னகை யினைய மாகவு மெம்வயி
னூடல் யாங்குவந் தின்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமை[ய]த்து
வறுங்கை காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வலமரல்
போற்றா யாகலிற் புலத்தியா லெம்மே." [அகம் - ௩௯]

என்றது கனாக் கண்டு கூறியது.

"கேட்டிசின் வாழி தோழி யல்கற்
பொய்வ லாளன் மெய்யுறன் மரீஇ
வாய்த்தகு பொய்க்கனா மருட்ட
வேற்றெழுந்
தமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற வளியன் யானே." [குறுந் - ௩௦]

௱கூசா.

தாய்க்கு முரித்தாற் போக்குடன் கிளப்பின்.

என்-னின், நற்றாய்க் குரியதோர் மரபு உணர்த்திற்று.

மேற்சொல்லப்பட்ட கனவு தாய்க்கும் உரித்து: ன்றவாறு. உதாரணம்:—

உடன்போக்குக் கிளக்கப்பட்டுழி

'கண்படை பெறேன் கனவ'

னவரும். வேறும் வந்தவழிக்காண்க.

[அகம் - ருரு]

(௬)

௱கூஎ. பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே
நட்பி னடக்கை யாங்கலங் கடையே.

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி

கூறுதனுதலிற்று.

பால்கெழ கிளவி நால்வர்க்கு முரித்து என்பது—பான்மை கெழுமப்பட்டகிளவி பெண்பாலா ராகிய நால்வர்க்கும் உரித்தென் றவாறு.

நால்வராவார்—தலைவி, தோழி, நற்றாய், செவிலி. அஃதேல் தலைமகளை யொழிய வர் என்று அமையாதோ எனின், மேல் தலைமகட்கும் உரித்தென்றார் அவரொடு கூட ால்வர் என வகையறுத்தல் என்பது.

நட்பி னடக்கை யாங்கலங் கடையே

ாதவிடத்து என்றவாறு.

என்பது—நட்பின் வழங்கும் வழக்கல்

அஃதாவது, தலைவியொடு தோழி யொழுகும் ஒழுக்கம் அவ்வழி யல்லாதவிடத் தன் றவாறு. உஅவண் மாட்டு நிகழ்வது தலைவன் தோழிக்குணர்த்தாது பிரிந்தவழி என்று காள்ளப்படும். பாற்கிளவி என்பது பயிலாதவரும் ஒருகூற்றுச்சொல் எனப்பட்டது. தனைக் கெழுமிய சொல் பால்கெழு கிளவி யாயிற்று. ஆண்டு நற்றாய் கூறியதற்குச் சய்யுள்:—

"கருமணற் கிடந்த பாவையென்
மருமக ளேயென முயங்கின ளழுமே."

[அகம் - ௱௬௫]

செவிலி கூறியதற்குச் செய்யுள்:—

"தான்றாயாக் கோங்கந் தளரா முலைகொடுப்ப
வீன்றாய்நீ பாவை யிருங்குரவே—யீன்றாள்
மொழிகாட்டா யாயினு முள்ளொயிற்றாள் சென்ற
வழிகாட்டாய் நீயெனக்கு வந்து."

[திணைமாலை - ௬௫]

தோழிகூறியதற்குச் செய்யுள் வந்தவழிக்காண்க.

(௫)

௱௬அ. உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பி னால்வர்க்கு முரிய.

என்-னின், மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கு முரியதோர் பொருண்மை யுணர்த்
ற்று.

உயிரும் நாணும் மடப்பமும் என்று சொல்லப்பட்டவை குற்றந் தீர்ந்த சிறப்பினை
டைய தலைமகட்கும் தோழிக்கும் நற்றாய்க்கும் செவிலிக்கும் உரிய வென்றவாறு.

7 ௬௯

## தொல்காப்பியம் - இளம்பூரணம்

செயிர்தீர் சிறப்பி னென்றமையான் ஏனையோர் போலாது இவர் நால்வரும் ஒருநி
பர் என்று கொள்க. இதனைச் சொல்லியது என்னை யெனின், இந்நால்வரும் ஆக்கமுங்
கேம் ஒருவர்மாட்டு வந்துழித் தமக்குற்றது போல்
நினைப்பராதலான் ஒருவரை
ஒருவர் இன்றியமையாது ஒருயிர் போல்வர் எனவும், நாணமும் மடனும் நால்வர்க்கு
குமாகலான் அ[வ]லமாகிய வழியும் வருத்தம் ஒக்கும் எனவும் கூறியவாறு. அதற்கு
ய்யுள் :—

"இவளே நின்னல திலளே யாயுங்
குவளை யுண்க ணிவளல திலளே

யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே."

என வரும்.

(சு)

௱௬௬. வண்ணந் திரிந்து புலம்புங் காலை
புணர்ந்தது போல வுறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே.

என்-னின், தலைமகட் குரிய தோர் பொருளுணர்த்திற்று.

தலைமகள் வண்ணம் வேறுபட்டுத் தனிமையுறுங் காலைத் தலைமகன் பிரிவைத்
r உறுப்புக்கள் உணர்ந்தனபோலப் பொருந்தும்வகையாற் கூறவும் பெறும் என்றவாறு.

உம்மை எதிர்மறை.

"தணந்தமை சால வறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்." [குறள் - ௲௨
௱௩] ௭

"தண்ணந் துறைவன் றுறந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை." [குறள் - ௲௨௭௭]

என வரும்.

உா. உடம்பு முயிரும் வாடியக் கண்ணு

மென்னுற் றனகொ லிவையெனி னல்லதை[க்]

கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

என்-னின், இது உடம்பும் உயிரும் மெலிந்த இடத்தும் இவை ,என்னுற்றன ரக் கூறினல்லது, கிழவோன் உள்வழிப் படர்தல் கிழத்திக்கு இல்லை என்றவாறு.

உதாரணம்:—

எனவும்,

“கதுமெனத் தாநோக்கித் தாமே கலிழு
மிதுநகத் தக்க துடைத்து.” [குறள் - தூளஎரு]

(பிரதி)—1. இவனே வாயும்.

"ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிடர்ப்பட் டன." [குறள் - ௲௱எசு]

னவும் வரும்.

(அ)

உாக. ஒருசிறை நெஞ்சோ டுசாவுங் காலை
யுரிய தாகலு முண்டென மொழிப.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

தனித்து நெஞ்சோடு உசாவுங்காலத்துக்
கிழவோற்சேர்தல் உரியதாகலும் உண்டென்றவாறு.

உம்மை எச்சவும்மை யாகலாற் றோழியொடு உசாதலுங்
கொள்க.

"கோடீ ரிலங்குவளை நெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
யீங்கிவ ணுறைதலு முய்குவ மாங்கே
யெழுவினி வாழிய நெஞ்சே" [குறுங் -
௰௧]

என வரும்.

"பகலே பலருங் காண நாண்விட்

டகல்வயிற் படப்பை யவனகர் வினவிச்

சென்மோ வாழி தோழி" [நற்றிணை -

நகூரு]

ன்றது தோழியொடு உசாவியது.

(க)

உா௨. தன்வயிற் கரத்தலு மவள்வயின்

வேட்டலு

மன்ன விடங்க ளல்வழி யெல்லா

மடனொடு நிற்றல் கடனென மொழிப.

என்-னின், தலைமகட் கின்றியமையாத மடன்அழியும்

இடன் உணர்த்துதல் நுதலிற்று.

தலைமகன் தனதொழுக்கந் தலைமகள்மாட்டுக் கரந்து உணர்த்தும்வழியும் தலை
கள் மாட்டுப் புணர்ச்சி வேட்கை தோற்றியவழியு மாகிய [வ]த்தன்மைப்பட்ட விடங்கள்
ாதவழி யெல்லாந் [1]தலைமகள் மடனொடு நிற்றல் கடன் என்று சொல்லுவர் என்றவாறு.

தன்வயிற் கரந்தவழி மடனழிய நின்றதற்குச்

செய்யுள்:—

"முத்தேர் முறுவலாய் நம்மலைப் பட்டதோர்

புத்தியானை வந்தது; காண யான் றங்கினேன்"

என்றவழி, அதற்குடம்படாது

"அவ்வியானை வனப்புடைத்

தாகலுங் கேட்டேன்" [கலித் - கள]

என்றவழி, பொய்கூறினன் என்னுங் [2]கருத்தினளாகிக் கூறுதலின் மடனழிதலா

ற்று.

---

(பெ.கி)—1. அமைமகள். 2. கருக்கினாகிக்.



"கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி

[1]மதவுநடைச்

செவிலி கையென் புதல்வனை நோக்கி

நல்லோர்க் [2]கொத்தனிர் நீயி ரிஃதோ

செல்வர்க் கொத்தனம் யாமென

மெல்லவென்

மகன்வயிற் பெயர்[த]ந்த[ெ]னனே"

[அகம் - உசு]

என்றவழி வேட்கை தணிதலாகாதாள் அது தணியுந்துணையு

வுக்கை நெகிழ்ந்ததெனப் பெயர்தல் மடனழிதலாயிற்று.

முயங்காது, ச

(

உ௱கூ. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி

யறத்நியன் மரபில டோழி யென்ப.

இது அறத்தொடுநிற்கு நிலைமரபு உணர்த்திற்று. தலைவி அறத்தொடு நிற்கு ஙாலத்தன்றித் தோழி தானே அறத்தொடு நிற்கும் மரபு இலள் என்றவாறு.

தலைவி அறத்தொடு நிற்குமாறு:—

“வீழ்ந்த மாரிப் பெருந்தண் சாரற்
கூதிர்க் கூதலத் தலரி நாறு
மாதர் வண்டி னயவருந் தீங்குரன்
மணநாறு சிலம்பி னசுண மோர்க்கு
முயர்மலை நாடற் குரைத்த லொன்றோ
துயர்மருங் கறியா வன்னைக் கிந்நோய்
தணியுமா றிதுவென வுரைத்த
லொன்றோ
செய்யா யாதலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த
செயலை மருதளி ரன்னவென்
மதனின் மாமைப் பசலையுங் கண்டே.” [நற்றிணை ;- உ௪௪]

என வரும். தோழி யறத்தொடு நிற்[றல் வரு]கின்ற சூத்திரத்தாற் கூறுப. (௰௪

உ௱௪. எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல்

கூறுத லுசாஅத லேதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு

தொகைஇய
வேழு வகைய வென்மனார் புலவர்.

என்-னின், இது தோழி யறத்தொடு
நிற்குமாறு உணர்த்திற்று.

இதற்குப் பொருள் களவியலுள் தோழிகூற்று உரைக்கின்றுழி உரைக்கப்பட்டது
(மஉ)

உாரு. உற்றுழி யல்லது சொ[ல்]ல லின்மையி

னப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப.

என்-னின், இது செவிலிக் குரியதோர் மரபுண
ர்த்திற்று

காமம் மிக்கவழி யல்லது சொல்நிகழ்ச்சி
யின்மையின் தலைமகள் தான்கருதிய பாருண்மேல் வேட்கை
[யைத்] தலைமகட னன்றனே யறிவர் என்றவாறு.

---

(பிா-தி)—1. மகவடைச். 2. கொக்கரீர் நிீஇயகோர்.

பன்மையாற் கூறினமையால் அவ்வுணர்ச்சி செவிலிக்கும் நற்றாய்க்கும் ஒக்கும்

னறவாறு.

இதனாற் சொல்லியது அறத்தொடு நிற்பதன் ணரும் எனக் கொள்க.

முன்னம் செவிலி குறிப்பினான்

"அன்னாய் வாழி வேண்டன்னை நின்மகள்

பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு

நனிபசந் தனளென வினவுதி" [அகம் - ௪௮]

என்றவழிச் செவிலி குறிப்பினான் உணர்ந்தவாறு காண்க. வேட்கைதோற்றத் லைமகனில்லாதவழித் தோழிகூற்று நிகழும். அது "காமர் கடேப்புனல்" [கலித் - ௩௯] ன்னும் பாட்டினுள் காண்க. (௰௩)

உ௱௯. செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு

மறிவு மருமையும் பெண்பா லான.

என்-னின், இது பெண்டிர்க் குரியதோர்

இயல்புணர்த்திற்று.

செறிவு என்பது—அடக்கம்.

நிறைவு என்பது—அமைதி.

செம்மை என்பது—மனங்கோடாமை.

செப்பு என்பது—சொல்லுதல்.

அறிவு

என்பது—நன்மை பயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிதல்.

அருமை என்பது—உள்ளக் கருத்தறிதலருமை.

இவை எல்லாம் பெண்பக்கத்தன ஏறவாறு.

இதனுற் சொல்லியது மேற்சொல்லிய அறத்தொடுநிலைவகை இனிக்கூறுகின்ற
ரவு கடாதற்குப் பகுதியும் உண்மைவகையாலும் புனைந்துரைவகையாலும் கூறுங்கால்
வை பேதையராகிய பெண்டிர்க்கு இயையுமோ என

ஐயுற்ருர்க்குக்கூறப்பட்டது. (யஉ)

உாஎ. பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலுந்
தன்னை [1]யழிதலு மவணூ றஞ்சலு
மிரவினும் பகலினும் நீவா வென்றலுங்
கிழவோன் றன்னை வார லென்றலு
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த வன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப.

என்-னின், இது தோழி கூற்றிற் கூறப்பட்ட சிலகிளவிக்குப் பயன்உணர்த்திற்று.
தலைமகன் வருகின்ற பொழுதும் நெறியும் ஊரின்கட் காவலும் என்று சொல்லப்
டவற்றின்கண் வரும் தப்பினால் உளதாகுங் குற்றங் காட்டலும், தான் மனனழிந்து
றலும், தலைமகட்கு வரும்இடையூறு கூறலும், தலைமகனைப் பகற் குறிவிலக்கி இரவுக்குறி



வ.ா என்றலும், இரவுக்குறிவிலக்கிப் பகற்குறி நீ வா என்றலும், தலைமகனை வாரா தொ யனக் கூறலும், நன்மையாகவுந் தீமையாகவும் பிறபொருளை எடுத்துக்கூறலும், இ ன்மையவாகிக் குற்றம் பயப்ப வந்த வத்தன்மைய பிறவும், புணர்ச்சி விருப்ப மின்ெ ாற் கூற ப்பட்டனவல்ல: வரைதல்வேண்டும் என்னும் பொருளையுடைய என்றவாறு.

இவையெல்லாந் தோழி கூற்றினுள் கூறப்பட்டன. ஆயின் ஈண்டோதிய தென்?
னின், அவை வழுப்போலத் தோற்றும் என்பதனைக் கடைப்பிடித்து அன்பிற்கு மா
ாது ஒருபயன்படவந்த தென வுணர்த்துதலே ஈண்டு ஓதப்பட்ட தென்ப. நன்மை
மையும் பிறிதினைக் கூறலும் என்பது நாடும் ஊரும் இல்லுங் குடியும் என ஆண்டே ப்பட்டது. இவை வரைதல் வேட்கைப் பொருளவாமாறும் ஆண்டுக் காட்டப்பட்ட உ ணாத்தான் உணர்க.

(ம)

௨௱௮.

வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கி னுரித்தென மொழிப.

என்- னின், இதுவும் தலைமகட்குந் தோழிக்கும் உரியதோர் இயல்புணர்த்திற்று

வரைதல் வேட்கைப் பொருளாற் கூறுதலை மறுத்துப் பட்டாங்கு கூறிச்சொல்

ல் மருவிய பக்கத்தி னுரித் தென்றவாறு. மருவியபக்கமாவது களவொழுக்கம் நீட்டித்
டம். அவ்வழிப்பட்டாங்கு கூறுலும் ஆம் என்றவாறு. எனவே மேற்கூறியவாறுகூறத்
ருவாதவழி என்றவாறும்.

"கொ[டி]ச்சி யின்குரல் கிளை[செ]த் தடுக்க[த்து]ப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
க[ா]வலுங் கடியுநர் போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மே." [ஐங்குறு -
௨௮௧]

என வரும்.

(ம)

௨௱௯. தேரு மியானையுங் குதிரையும் பிறவு

ஊர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப.

என்-னின், இது தலைமகற்குரிய தோர் மரபுணர்த்திற்று.

களவுகாலத்துத் தேரும் யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்து சேறலும் உரி
ன்றவாறு. களவின்கண் என்பது அதிகாரத்தான் வந்தது.

"நெடுந்தேர் கடாஅய்த் தமியராய்

வந்தோர்

கடுங்களிறு காணீரோ வென்றீர்—கொடுங்குழையார்
யானை யதருள்ளி நிற்பரோ தம்புனத்
தேனல் கிளிகடிகு வார்.

பிறவு மன்ன.

'ஊர்ந்தன ரியங்கலு முரியர்' என்றமையால் தனி வருதல் பெரும்பான்
தனை எச்ச வும்மையாக்கி வையமூர்தலும் இளையரோடு வருதலுங் கொள்க.

"வல்வே விளையரொ [டெ]டல்வி[ச்] செல்லாது"

[அகம் - ௬௨௰]

என வரும்.

பிறவுமன்ன. இதனுஞ் சொல்லியது பெரியார் இவ்வாறு

செய்வார் எனவுங்கூறியவாறும்

(௰எ

௩௱௰. உண்டற்குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே.

என்-னின், இது ஒருசார் வழுவமைத்தலை நுதலிற்று.

உண்டற்றொழிலுக் குரியவல்லாத பொருளை யுண்டனவாகக் கூறலும் மரபென்;வாறு.

'பசலையா லுணப்பட்டு பண்டைநீ
ரொழிந்தக்கால்' [கலித் ௰௬]

எனவும்,

'நீலமுண்ட துகில்'

எனவும்,

"கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே
யிவையென்னைத்
தின்னு மவர்க்கா[ண] லுற்று." [குறள் -
௲௨௪௪]

எனவும் வரும்.

இது சொல்லின்கட் கிடந்ததோ ரொழ்பு.

(௰௪

உ௱௰க. பொருளென மொழிதலும் வரைநிலை

யின்றே

காப்புக்கை[ம்] மிகுத லுண்மை யான
[அன்பே யறனே யின்ப நாணொடு
துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலி
னொன்றும் வேண்டா காப்பி னுள்ளே.]

என்-னின்,

இது களவுக் காலத்துத் தலைமகற் குரியதோர் இயல்புணர்த்திற்று.

பொருள்வயிற் பிரிதல்வேண்டும் எனக்கூறுதலும் கடியப்படாது: தலைமகளை தமர் காக்குங்காவல் மிகுதியுள்ளவழி யிவைநீங்கப்பெறும் என்றவாறு.

இதனாற் சொல்லியது அன்பையும் அறத்தையும் இன்பத்தையும் நினைத்து வரு தப்பெறுன் எனவும் நாணத்தைக் கைவிட்டுத் தமர்கொடுக்குமாறு முயலவேண்டுமெ பதூஉம் கூறியவாறும். இவை ஒருவழித் தணத்தற்கண் நிகழ்வன. (ய

உ௱௰உ. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.
என்-னின், இதுவும் தலைமகற்குரியதோர் திறன் உணர்த்திற்று.

தலைமகன் பொருள்வயிற் பிரியும்வழி உடன்போக்குக் கருதிய தலைமகட்கு யா போகின்ற நெறி கல்லும் கரடுமாகிய சுரம் எனக்கூறுதலும் நீக்கப்படாது என்றவா இதனாற் சொல்லியது காப்புமிகுதிக்கண் வருத்தமுறுந் தலைமகளை யுடன்கொண் போதல் தக்கது என்பார்க்கு நெறியருமை கூறி விலக்கவும் பெறும் என்றவாற. (உ

உ௱௰௩. உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.

என்-னின், இதுவு மோர் மரபு உணர்த்திற்று.

உயர்ந்தோர்கூற்று வழக்குவழிப்படுதலின் வழக்குப்படுதல் செய்யுட்குக் கட

என்றவாறு.



எனவே வழக்கழியவருவன செய்யுட்கண் வரப்பெறு என்றவாறு. இதனுலே

லதிகாரத்திற் கூறிய சொல்லும் இவ் வதிகாரத்திற் கூறுதற்கியன்ற பொருளும் வழ

ாடு புணர்ந்தனவே செய்யுட்கண் வருவன; புணராதன செய்யுட்கண் வரப்பெற

ன்றவாறும். இன்னும் இந்நூலகத்து அகப்பொருளாகவும் புறப்பொருளாகவும் எடு

ாதப் பட்டதன்றி உயர்ந்தோர் வழக்கொடுபொருந்தி வருவனவெல்லாஞ் செய்யுட்கு

ாருளாகப் புணர்க்க என வெஞ்சிய துணர்த்தியவாறு மாம். உயர்ந்தோர் வழக்கெ

மையானும், பொருளுமின்பமும் கொடாமல் மூன்றினுளொன்று பயப்பக்கூறுத

ாள்க. (உ

உாடுசு, அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே

வழக்கென வழங்கலும் பழித்த தென்ப.

என்-னின், மேலதற் கோர் புறனடை.

அறத்திற் கழிவுடையன பொருட்குப்

பயன்படவரின் அதனை வழக்கென் றுவழங்குதலும் பழித்த

தென்றவாறு.

பொருளாவது அகப்பொருளும் புறப்பொருளும். அறத்திற் கழிவு வரும் அகப்பொ

ளாவது பிறன்மனைக் கூட்டம். பொருட்பயன் வருதலாவது அவராலே பொருளெ

றுதல். அவ்விடத்து இன்பமும் பொருளும் பயப்பினும் அதனை வழங்குதலும் பழிக்க

ட்டதென்றவாறு. உம்மை முற்றும்மையாகலான் வழக்கென்

றுரையற்க என்றவாறு.

"எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்." [குறள் - ௱௪௪]

என வரும்.

புறப்பொருட்கண் அறக்கழி வுடையன பகைவர் தேஎத்து நிரைகோடலும் அழி; லும் போலப் பொருட்பயன் காரணத்தான் நட்டோர் தேஎத்துஞ் செயல். இவையு பொருள் பயப்பினும் வழக்கென வழங்குத லாகா என்றவாறு.

இதுவு மோர்மூகத்தாள் தி கூறியவாறு.

"பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை." [குறள் - ௬௫௭]

எனவரும்.

(உஉ உ௱௰௫. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரி[யா] நல்வழிப் படுத்தே.

என்-னின், இதுவு மது.

மிக்கபொருளாவது மேற்கூறப்பட்ட அகப்பொருள்.

அப்பொருட் கண்ணுண் நீங்காத நல்வழிக்கட் படுத்துப் பொருள்வகை புணர்க்க என்றவாறு. எனவே அ, தலாயின வழுவின் றாயினும் நாணழிய வரும் பொருண்மை [1]புணர்த்தற்க என்றவாறு

"பிறர்நாணத் தக்கது தானுண ணுயி
னறனுணத் தக்க துடைத்து." [குறள் - தூ௦அ]

என வரும்.

(உரு

(பிரதி)—1. புணர்க்க



உ௱௰௬. முறைப்பெயர் மருங்கி[ன]ற் கெழுதகைப் பொதுச்சொ
னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே.

என்-னின், இதுவும் வழுவமைத்தலை நுதலிற்று.

முறைப்பெயராவது—இயற்பெயர் முதலிய பெயரானன்றி முறைமைபற்றி வரு வது; அது தந்தைமகனைக் கூறும்பொழுது தம்முன், தம்பி, [என்பனவும்] கிழவன் தோழன் [1]என்பனவும் போல வருவன.

அப்பெய ரகத்துவரும் நன்றாகிய கெழுதகைப் பயிற்சியாற்கூறும் 'எல்லா' என்பது.

 லாவது—

நிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே என்பது—நிற்றற்குரிய மரபினுனே யிரு
ாற்கு முரித்தென்றவாறு. நிற்றற்குரிய மரபின் என்பது இவ்வாறு தோற்றுமையான்
ான்றவாறு.

"எல்லாவிஃதொத்த னெ[ன்]பெறுன் கேட்டைக்காண்" [கலித்-கக

ான்றவழிப் பெண்பான்மேல் வந்தது.

"எல்லா,
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னு
செய்வது நன்றுமோ மற்று." [கலித் -
கூஉ] ான்[றவழித் தலைமகன்மேல் வந்]தது.

இதுவும் ஒரு சொல்வழு அமைத்தவாறு. இச் சொற் காமப்பொருளாகத் தோற்
வதலாற் சொல்லதிகாரத்து ஓதாது ஈண்டு ஓதப்பட்டது. (உச)

உளஎ. தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
வெம்மென வருஉங் கிழமைத் தோற்ற
மல்ல வாயினும் புல்லுவ வுளவே.

என்-னின், இதுவும் ஒருசார் மரபுவழு வமைத்தலை நுதலிற்று.

தாயத்தான் எய்துதலாவது தந்தைபொருள் மகற்குறுதல். ஈயச் சேறலாவது ருவன் கொடுப்ப ஒருவன் கோடல். வினைவயிற் றங்கலாவது உழவுமுதலியன வற்றான் ருதல். வீற்றுக்கோளப் படுதலாவது வேறுபடுத்திக் கோடல்; அஃதாவது பகையினுவ் ந்தது கோடல். இந்நான்கினும் வரும் பொருளினது உரிமை[த்]தோற்ற மல்ல வாயினும் பாருக் துவ வுள என்றவாறு.

செய்யா என்னும் வினை யெச்சம் வரூஉம் என்னும் பெயரெச்சத்தொடு முடிந் து. அன்றியும் செய்யா என்பதனைப் பெயரெச்ச எதிர்மறையாக்கி இந்நான்கினும் வருந் கவு இல்லாதபொருள் பொருளல்வாயினும் எமதெனவரும் உரிமைத்தோற்றம் பொருந் வ வுள என்றவாறு.

அல்லவாயினும் என்பதனை மாறிக்கூட்டுக. எனவே ஒரு முகத்தாற் பொருள் தவோர் திறன் கூறினருமாம். இனி அக் கிழமை[ம]த் தோற்றம் ஆவது:

"விரும்பிநீ, யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்" [கலித் - ௰அ]


ஞளமழூ௰மய

ான்றவழித் தலைமகள் தோளைத் தோழி தன்னையுமுளப்படுத்தி எனதெனக் கூறியவ ாண்க. பிறவுமன்ன. (உ

உ௱௰அ.

ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவகை தாமே வழக்கென மொழிப.

என்-னின், இதுவு
மொருசார் பொருள்கொளுந்திறன் உணர்த்துதல்நுதலிற்

ஒருபக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக் கண்ணும் வருவகைத வழக்கு நெறி என்றவாறு.

மனையோள்மாட்டுங் காமக்கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும் பிரிவும் ஊடலும் பரத்தையர் மாட்டு நிகழும். அது வருமாறு:—

'அன்னை கடுஞ்சொ லறியாதான்' [கலித்-சுஎ]
என்னுங் கலியுள்,

"சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
வவ்வழி யென்றும்யான் காண"

என்பது புணர்வு குறித்துவந்தது.

"உள்ளுதொறு நகுவ றோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
றேங்கம ழைம்[பால்] பற்றி யெம்வயின்
வான்கோ லெல்வளை வவ்விய [1]பூசற்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்ப லென்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநெறி வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின்
[2]மண்ணார் கண்ணி னதிரு

3நன்ன ராஎன்;நடுங்கஞர் நிலையே." [நற்றிணை - ௲]

இது ஊடல் குறித்து வந்தது. இப் பரத்தையர் பொருட்பெண்டி ராகல் இன்பம் பயக்குமோ எனின், அஃது இன்பமாமாறு வருகின்ற சூத்திரத்தான் எல்ல பொருட்கும் உளதாகும் பொதுவிலக்கணம் கூறியவாறு.

(உ

உ௱ௗ௬. எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது

தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

எல்லாவுயிர்க்கும் இன்பமென்பது தான் மனம்பொருந்திவரும் விருப்பத்ை யுடைத்து என்றவாறு. எனவே மனம்பொருந்தியவழிப் பரத்தையர் மாட்டும் இன்பமு தாகும் எனவும் பொருந்தாதவழி மனைவியர்மாட்டும் இன்பமின்றும் எனவும் கொள்க.(உ

உ௱உ௰. பரத்தை வாயி லல்வர்க்கு முரித்தே

நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

(பி-ரை) 1. வகர். 2. மன்னர்க். 3. ...

உரை

என்-னின், பரத்தையிற் பிரிவிற்கு உரியாரை யுணர்த்துதல் நுதலிற்று.

பரத்தையர்மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம்பெயர்தல் இல்லை என்றவாறு.

எனவே, தன்னூரகத்துஞ் சார்ந்தவிடமுங் கொள்க. நால்வர்க்கும் உரித்து என்மையான் நான்குவருணத்துப் பெண்பாலாரும் அவளொடு ஊடப்பெறுப என்றவாறும்.

"யாரிவ னெங்கூந்தல் கொள்வா
னிதுவமோர
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து"

[கலித் - அக] ன்பது பார்ப்பனி கூற்று.

"பெரியார்க் கடியரோ வாற்று தவர்"

[கலித் - அஅ] ன்பது அரசி கூற்று.

(உஅ)

உாஉக. ஒருதலை யுரிமை வேண்டினு மகடூஉப்
பிரித லச்ச முண்மை யானு
மம்பலு மலருங் களவுவெளிப்
படுக்குமென்
றஞ்ச வந்த வாங்கிரு வகையினு

நோக்கொடு வந்த
விடையூறு பொருளினும்
போக்கும் வரைவு மனைவிகட்
டோன்றும்.

என்னின், இது களவின்கண் தலைமகட்குரியதோர் மரபு உணர்த்திற்று.

ஒருதலையுரிமை வேண்டினும் என்பது—ஒருதலையாகத் தலைமகள் உரிமை பூண்டலை வேண்டியவிடத்து மென்றவாறு.

மகடூஉப் பிரிதலச்ச மூண்மை யானும்
என்பது—பிரிதற்கண் வரும் அச்சம் பண்பாற்கு இயல்பாகு மென்றவாறு.

அம்பலு மலரும் களவுவெளிப் படுத்துமென் றஞ்ச
வந்த வாங்கிரு வகையி னும் என்பது—களவொழுக்கத்தை வெளிப்படுக்குமென்று அஞ்சும்படியாக வந்த அம்பலும் அலருமாகிய இருவகையின் கண்ணும் என்றவாறு.

நோக்கொடு வந்த விடையூறு பொருளினும்
என்பது—தலைமகன் வரவுபார்த்திருந்தவழி வந்த இடையூறாகிய பொருளின் கண்ணும் என்றவாறு.

அவையாவன:—தாய் துஞ்சாமை நிலவுவெளிப்படுதென் முதலியன.

போக்கும் வரைவு மனைவிகட் டோன்றும் என்பது—தலைமக ளுடன்போதற் குறிப்பும் வரைவுகடாதற் குறிப்பும் மனைவிமாட்டுத் தோன்றும் என்றவாறு.

உதாரணம்:—

ளிரக்கம்.

என்-னின், இது தலைமகட்குந் தோழிக்கு முரியதோர் திறன் உணர்த்திற்று.

வருத்தமிகுதியைக் குறித்தவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் உரித்தென், சால்லுவர் என்றவாறு.

எனவே வருத்தமிகுதியைச் சுட்டாதவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் இன்றெ, க் கொள்ளப்படும்.

"செல்லாமை யுண்டே லெமக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை." [குறள் - ௲௱௫௰௧]

"அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
1யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்கு 2நின்செம்மல் சிதை[ய]த்
தவலருஞ் செய்வினை முற்றுமை யாண்டோ
ரவலம் படுதலு முண்டு." [கலித்-௰௯]

இதுவு மோர் மரபுவழு வமைத்தது.

உ௱உங. மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு
நினையுங் காலைப் புலவியு ளுரிய.

என்-னின், கற்புக்காலத்துத் தலைமகட் குரியதோர் மரபு உணர்த்திற்று.

தலைமகள் உயர்வும் தலைமகன் தாழ்வும் ஆராயுங்காலத்துப் புலவிக்காலத், ரிய வென்றவாறு.

எனவே 3ஒழிந்த ஊடல் துனிவென்பனவற்றிற் குரியவாம்.

"ஒரூஉக் கொடியிய னல்லார் குரனுற்றத் தேற்ற
முடியுதிர் பூந்த[ா]து மொய்ம்பினை வாகத்
தொடிய வெமக்குநீ யாரைப் பெரியார்க்
கடியரோ வாற்று தவர்
கடியதமக்கினி, யார்சொலத்
தக்கரா மற்று
விணைக்கெட்டு 4வாயல்லா வெண்மை யுரையாதி. சென்றீநின்
மாய மருள்வா ரகத்து.

ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு." [கலித். அஅ]

(பிரதி)—1. மௌனிகமை. 2. நிறைசெம்மல். 3. வரிக்க. 4. [illegible]

இதனுள் தலைமகன் பணிவுந் தலைவி யுயர்வுங் காண்க. இஃதாண்டுக் கூறி
தென்னை? 'காமக் கடப்பினுட் பணிந்த கிளவி'[கற்பியல்-மக] யென மேற்கூறப்பட்டத
லெனின், ஆண்டுக் கூறிய[து] ஊடல் புலவி துனி யென்னு மூன்றிற்கும் பொதுப்பட
நிற்றலின், இது புலவிக்கே உரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு காண்க. (நு.அ

உாஉ.ஈ. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்

புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

என்-னின், இதுவு [மோர் மரபுணர்த்திற்று.]

கற்புக்காலத்து நிகழாநின்ற தகையின் பக்கத்து

வேட்கைமிகுதியாற் புகழ்தலைக்கார் என்றவாறு.

களவுக்காலத்து நலம்பாராட்டிய தலைமகன்

கற்புக்காலத்து [1]மெழினலம் பாராட்டப் பெறும் என்றவாறு.

தகை என்பது அழகு. அதனைப் பற்றிப் புகழும் எனக்
கொள்க.

"அணைமரு ளின்றுயி லம்பணைத்
தடமென்றோட்

டுணைமல ரெழினீலத் தேந்தெழின்
மலருண்கண்

[மண]மௌவன் முகையன்ன மாசிரை

வெண்பன்

உமணாறு நறுந்தண் மாரி மினிருங்

கூந்த

லலர்முலை யாகத் தகன்ற வல்குற்
சிலசிரை வால்வளைச் செய்யா யோவெனப்

பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி"

[கலித் - ௰௬]

என வரும்.

(௬௨

உ௱உ௫. இறைச்சி தானே யுரிப்புறத் ததுவே.

என்-னின், இறைச்சிப்பொருளாமா றுணர்த்திற்று.

இறைச்சிப்பொருளென்பது உரிப்பொருளின்
புறத்தாகித் தோன்றும் பொரு

என்றவாறு.

அஃதாவது கருப்பொருளாகி[ய] நாட்டிற்கும் ஊர்க்குந் துறைக்கும் அடையா

வருவது.

"[நிலத்தினும் பெரிதே
வானினு முயர்ந்தன்று

நீரினு மாரள வின்றே] சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே" [குறுந் - ங]

என்றவழி, நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவுந் தேனும் இறைச்சி பொருள் என்று கொள்க. (ஙா

உரூஉசு. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே.

(பிரதி)—1. மொழிநலம். 2. மனுநாறு.

என்-னின், இது இறைச்சிப் பொருள்வயிற் [பிறக்கும்] பிறிது மோர்பொரு ணர்த்துதல் நுதலிற்று.

இறைச்சிப் பொருள்வயிற் றோன்றும் பொருளும் உள, பொருட்டிறத்தியலும் ப ந்து ஆராய்வார்க் கென்றவாறு.

இறைச்சிப் பொருள் பிறிதுமோர் பொருள் கொள்க் கிடப்பனவும் கிடவாதன
ன இருவகைப்படும். அவற்றிற் பிறிதோர் பொருள்பட வருமாறு:—

"ஒன்றே னல்லெ ஞென்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாழ் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய்ய மலரு நாடனோ
டொன் [றேன்]றோழி யொன்றி ஞனே." [குறுந் - உ௱அ]

ன்பது வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்தவழித் தலைமகனோடு ஒன்றுமாறு என்
னனக் கவன்ற தோழி[க்கு] உடன்போதற் குறிப்பினளாய்த் தலைமகள் கூறியதாதலின்
தனுட் பொருகளி றென்றமையால் தலைமகள்தமர் தலைமகன்வரைவிற் குடன்ப
ரும் மறுப்பாருமாகி மாறுபட்ட தென்பது தோற்றுகின்றது. 'பொருகளிறு மிதித்
வங்கை' யென்றதனுற் பொருகின்ற விரண்டுகளிற்றினும் மிதிப்ப தொன்றாகலின் வை
டன்படாதார் தலைமகனை யவமதித்த வாறு காட்டிற்று. 'வேங்கை நின்று கொய்யம
ம்' என்றதனுன் முன்பு ஏறிப்பறித்தல் வேண்டுவது இப்பொழுது நின்று பறிக்கல
ற்று என்னும் பொருள்பட்டது. இதனுனே பண்டு நமக்கரியனாகிய தலைமகன் தன்னை
மதிக்கவும் நமக்கெளியனாகி யருள் செய்கின்றானெனப் பொருள் கொளக் கிடந்
று காண்க. (நச

உ௱உஎ. அன்புறு தகுவன விறைச்சியிற் சுட்டலு
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

என்பது [சூத்திரம்.] என்-னின், இது இறைச்சிப்பொருளாற் படுவதோர் பொருள்
ணர்த்திற்று.

அன்புறுதற்குத் தகுவன விறைச்சிப் பொருட்கட்
சுட்டுதலும் வற்புறுத்தலாம் என்றவாறு. உம்மை இறந்தது
தழீஇயிற்று.

"அடிதாங்கு மளவின்றி யழலன்ன
வெம்மையாற்
கடியவே [கனங்குழாய் காடென்று ரக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு] முரைத்தனரே."

என்றது வற்புறுத்தற் குறிப்பு.

[கலித் - ௰௧
(௩௫

உ௱உ௮. செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவு
மெய்பெற வுணர்த்துங் கிழவி

பாராட்டே.

என்-னின், இது தலைமகட்குரிய தோர்
இயல்புணர்த்துதல் நுதலிற்று.

தலைமகன் பொருள்வயிற் பிரிய மிடத்து
அதின்னைடயா னுள தாகிய அச்சமு

பொருள் தகாபம = பொருளாயல
ா.ாா

வினைவயிற் [பிரிவும்] பிரியுங் காலத்தினுந் தலைவியைப்
பாராட்டிப் பிரிதலினால், அப் பாராட்டினான் மெய்பெறவுணரும்
என்றவாறு.

உதாரணம்:—

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி" [கலித் - உச]

என்றமையாற் பாராட்டினால்
தலைமகள் பிரிவு உணர்ந்தவாறு அறிக. (௩௬)

உ௱உ௬. கற்புவழிப் பட்டவள் பரத்தையை யேத்தினு
முள்ளத் தூட லுண்டென மொழிப.

என்-னின், இதுவு மது.

கற்புக் காரணமாகத் தலைமகனது பரத்தைமைக் குடன்பட்டாளே யாயினும், ுளத்தின்கண் ஊடல் நிகழும் என்றவாறு. (௩௭)

உ௱௩௰. கிழவோள் பிறள்குண மிவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கு முரியள்.

என்-னின், இது தலைமகட் குரிய

தோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

தலைவி மற்றொருத்தி குணம் இத்தன்மையள் எனச்சொல்லித் தலைமகன் குறிப்பினை யறிதற்கு முரியள் என்றவாறு.

இது கற்பியலுட் கூறியதற் கிலக்கணம்.

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே." [ஐங்குறு - ௱௨௨]

என வரும். பிறவு மன்ன.

(௩அ) உ௱௩௧. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு
மெய்ம்மை யாக வவர்வயி னுணர்ந்துந்
தலைத்தாட் கழறற மெதிர்ப்பொழு தின்றே
மலிதலு மூடலு மவையலங் கடையே.

என்.னின்,

இது தலைமகட்குரிய தோர் மரபுணர்த்திற்று.

பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகட்குக் கூறியவழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்தவைத்தும் தலைமகன் மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்ட பொழுது இல்லை, மகிழ்ச்சியும் புலவியும் அல்லாத காலத்து என்றவாறு.

உணினும் என்ற உம்மை எதிர்மறை. கூறுமை பெரும்பான்மை. அதனை ஐயட்

ாது துணிதலான் மெய்ம்மையாகவென்றார். அதனைத் தலைமகன் வந்தவழிக் கூறுவா
ிற் றனக்குப் புணர்ச்சியிற் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறியவதனற்
ரில்லையாம். அதனைக் கலவியிறுதியினும் புலவியினும் கூறப்பெறும் என்றவாறு.

> "மின்னணங் குற்றவர் நீசெய்த கொடுமைக
> ளென்னுட னெர்துவந் துரையாமை பெறுகற்பின்" [கலித் - எ௭]

எனப் புலவியிற் கூறியவாறு காண்க.

கலவியிறுதியிற் கூறுதல் வந்தவழிக் [காண்க.]

(ந௩௧)

உ௱ந௨. பொழுதலை வைத்த கையறு காலை
யிறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்த மருட்கை மிகுதியொ
டவைநாற் பொருட்க ணிகழு மென்ப.

என்-னின்,இது பருவம் வந்துழித் தலைமகட் குரியதோர் வழுக்காத்தலை நுதலிற்று.

பொழுது தலைவைத்த லாவது—யாதானு மொரு பருவத்தைக் குறித்தவழியப்
வம் இருதிங்களை யெல்லையாக வுடைத்தாயினும் அது தோற்றியவழி என்றவாறு.

கையறு காலை என்பது—இது கண்டு செயலற்றகாலை என்றவாறு.

இறந்தபோலக் கிளத்த லாவது—அக்காலந்
தோன்றிய பொழுது கழிந்தது ரலக் கூறுதல்.

மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு அவை நாற்பொருட்கண் நிகழும்
ாப என்பது—அவ்வாறு கூறுதல் அறியாமையானுதல் வருத்தத்தானுதல் மயக்கத்தா
ுல் அக்காலத்திற் குரிய பொருள் மிகத்தோன்றுதலானுதல் என இந்நான்கு பொரு

னும் நிகழும் என்றவாறு.

சிறுபொழுதாயின் யாமங் கழிவதன்முன்னர்க் கூறுதல். எனவே இவ்வாறு வருஞ் ய்யுள் காலம் பிழைத்துக் கூறுகின்றதல்ல வென்றவாறு.

உதாரணம்:—

"பொருகடல் வண்ணன் புனைமார்பிற்

றார்போற்

றிருவிலங் கூன்றிறற் றீம்பெய றாழ

வருது மெனமொழிந்தார் வாரார்கொல்

வானங்

கருவிருந் தாலி நகும்." [கார்நாற் - க]

இது பருவங்கண்டவழி வாரார்கொல் என்றமையால் இறந்தபோலக் கிளந்த றாயிற்று. பிறவு மன்ன. இதுவு மோர் மரபுவழு வமைத்தல். (௩௰)

உ௱௩௩. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.

பொருள் துறைய = பொருளியல

நூற்பா

என்-னின், களவுக்காலத்துத் தோழிக்குரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இரந்து குறையுற்ற தலைமகனைத் தோழி நிரம்பநீக்கி நிறுத்தலன்றி மெய்ம்மை யுதலும் பொய்ம்மைகூறுதலும் நல்வகையுடைய நயத்தினாற் கூறியும் பல்வகையானும் படைத்து மொழிந்து சொல்லவும் பெறும் என்றவாறு.

உதாரணம் களவியலுட் காட்டப்பட்டனவுள்ளுங் காண்க. நல்வகையுடைய நயத்திற்குச் செய்யுள்:—

"வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
யவையினும் பலவே சிறுகருங் காக்கை
யவையினு மவையினும் பலவே குவிமட
லோங்கிரும் பெண்ணை மீமிசைத்

தொடுத்த

தூங்கணங் குரீஇக் கூட்டுவாழ் சினையே."

இது மடலேறுவல் என்ற தலைவனைப் [1]பழித்து அருளுடையீராதலான் மடலேறுது அரிது என நயத்திற் கூறியது.

இதுவுமோர் மரபுவழு வமைத்தவாறு.

உ௱௩௪. உயர்மொழிக் கிளவி யுறழுங் கிளவி
ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே.

என்-னின், தலைமகற்குந் தலைமகட்கு முரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உயர்த்துச் சொல்லுதற்குரிய கிளவி தலைமகற்குந் தலைமகட்கு மொத்தகிளவி;
யக்கிளவி தலைமகற்கே உரித்தென்றவாறு.

தலைவிமாட்டு ஐயக்கிளவி யின்றென்றவாறும். அதனாற் குற்ற மென்னையெனின், தய்வமென்று ஐயுறுங்கால் அதனை முன்பு கண்டறிவாளாதல் வேண்டும். காணாமையின் யமிலள் என்க. இனி உயர்த்துச் சொல்லுதல் உளவாம்.

"அவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்[ற]னள்" [அகம் - ௬௮]

ன்பது உயர்த்துச் சொல்லியவாறு.

தலைவன் உயர்த்துச் சொல்லியதற்குச் செய்யுள்:—

"மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி." (குறள் - ௲௱௧௮]

றவு மன்ன. ஐயக்கிளவி களவியலுட் கூறப்பட்டது.
(௬௨)

உ௱௩௫. உறுகண் ணோம்ப றன்னியல் பாகலி
னுரிய தாகுந் தோழிக ணுரனே.

என்-னின், இது தோழிக் குரியதோர் மரபுவழுக் காத்தலை நுதலிற்று.

(பிரதி)—1. பகுக்கு. 2. தேர்.



தலைமகற் குற்றதுன்பம் பரிகரித்தல் தோழி
யியல்பாகலின் அவட்குரியதாகு ரிவு என்றவாறு.

அதனானே 1யன்றே:

"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி"

ன்னும் பாலைக்கலியுள்,

"இழவ 2ரின்ன ரென்னாது பொருடான்
பழவினை மருங்கிற் [பெயர்பு]பெயர் புறையும்", [கலித். உக]

னக் கூறினள் என்றுகொள்க.
(௬௩)

உ௱௩௬. உயர்மொழிக் கிளவியு

முரியவா லவட்கே.

என்-னின், இதுவு மது.

உயர்த்துச் சொல்லுங் கூற்றும் உரித்து தோழிக்கு என்றவாறு.

"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே."

[கலித் - ௫௨] என்பது உயர்த்துச் சொல்லியவாறு.
(௪௪

௨௱௩௭. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த
ற்ருவின் றுரிய தத்தங் கூற்றே.

என்-னின், வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல்நுற்று.

தத்தங் கூறுபாட்டினுன் வாயில்கள்
கடின்றி யுரிய வென்றவாறு.

கூறும் கிளவி வெளிப்படக் கிளத்த

தத்தங்கூறுவது அவரவர் சொல்லத்தகும் கூறுபாடு. ஆனுருபு தொக்கு நின்றது. எனவே வாயில்களல்லாத தலைமகளும் நற்றாயும் மறைத்துச் சொல்லப்பெறுவ ன்றவாறு.

வருகின்ற சூத்திரம் மறைத்துச் சொல்லு முள்ளுறை சொல்லுகின்றா ராதலின்

ய்வுள்ளுறை வாயில்களை விலக்கியவாறு. இவர் மறைத்ததனுற்குற்ற மென்னை ? இ ற்றேவன் முறைமையராதலானுங் கேட்போர் பெரியோர் ஆதலானும் வெளிப்பட -ருக்காற் பொருள் விளங்காமையானும் அவ்வாறு ரின்மையானும் வெளிப்படவே கூறும் என்க. கூறினு ரிவர் கூற்றிற்குப் ட

(உ

உ௱௩௮. உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்

கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே.

என்-னின், உள்ளுறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று. உடனுறையும் உவமமுஞ் சுட்டும் நகையும் சிறப்பும் எனக் கெடலரு மரபினையுடைய உள்ளுறை ஐந்துவகைப்படுமென்றவாறு.

உள்ளுறையாவது பிறிதொருபொருள் புலப்படுமாறு நிற்பதொன்று. அது கருப்பொருள்பற்றிவருமென்பது அகத்திணையியலுட் [அகத்திணை - ௪௬] கூறப்பட்டது.

உடனுறையாவது உடனுறைவதொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொருபொருள் விளங்குவது.

"விளையாட் டாயமொடு வெணமர லழுத்தி
மறந்தனன் துறந்த [1]காழ்முளை யகைய
நெய்பெய் தீம்பால்
பெய்தனம் வளர்த்தது
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது நலனே
யம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலு மிலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கி
னிறைபடு நீழற் பிறவுமா ருளவே."

[நற்றிணை - ௱௭௨]

இதனுள் 'புன்னைக்கு நாணுதும்' எனவே, அவ்வழித் தான் வளர்த்த புன்னையென்றும், 'பல்காலும் அன்னைவருவள்'

என்றுடனுறைகூறி விலக்கியவாறு. பிறவுமன்ன

உவமம் என்பது உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது

"வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுந்தேன் வேட்டுங்
குறுகும்—நிறைமதுச்சேர்ந்
துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைப்பிரிந்த வண்டு."

[தண்டி-நரு-உரை]

இது வண்டைக்கூறுவாள் போலத் தலைமகன் பரத்தையிற்பிரிவு கூறுதலின் உள்ளுறையுவமமாயிற்று.

சுட்டு என்பது ஒருபொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல்.

"தொடிநோக்கி மென்றோளு நோக்கி
யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது." [குறள் - கூஉஎக]

இதனுள் இப் பூப்[பறிப்]பேமாயின் வளைகழன்று தோண்மெலிய நடத்தல் வல்லேமாக வேண்டும் என

ஒருபொருள் சுட்டித்தந்தமை காண்க.

நகையாவது நகையினூற் பிறிதொரு பொருளுணர நிற்றல்.

"அசையியற் குண்டாண் டோ ரேரியா ரேக்கப்
பசையினள் பைய நகும்."

[குறள் - நகூஅ]

இதனுள் நகையினூற் பிறிதோர் குறிப்புத் தோன்றியவாறு காண்க.

சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இது எனக் கூறுவதனுனே பிறிதோ பொருள் கொளக் கிடப்பது.

(உசு

உாகூ. அந்தமில் சிறப்பி னாகிய வின்பந்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.

(பொ-ஸ)—1. காள்மளை. 2. செய்பெய்.

அ மெய்ப்பாட்டியல் - நூற்பா

என்-னின், இதுவும் உள்ளுறைப்பாற் படுவதோர் பொருள் உணர்த்-ற்று.

அந்தமிலாத சிறப்பினாகிய வின்பத்திடத்து உள்ளுறைப் பொருண்மை வருதலும் த்த வியல்பு என்றவாறு.

'அந்தமில் சிறப்பு' என்பது மேன்மேலுஞ் சிறப்புச் செய்தல்.

"நுண்ணெழின் மாமை சுணங்கணி யாகந்தங்

கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையா

ரொண்ணுத லீவுவர் காதலர் மற்றவ

ரெண்ணுவ தெவன்கொ லறியே

னென்னும்" [கலித் - ச]

என்றவழி, இன்பத்தின் கண்ணும் பிறிதோர் பொருள் உண்டென்பது தோற்ற ற்றது.

(௬௭ள

உ௱சய. மங்கல மொழியு மவையன் மொழியு
மாறி லாண்மையிற் சொல்லிய மொழியுங்
கூறிய மருங்கிற் கொள்ளு மென்ப.

என்-னின், இதுவும் உள்ளுறைப்பாற்படுவதோர் சொல் உணர்த்-ற்று.

மங்கலமொழி முதலாகச் சொல்லப்பட்டனவு முள்ளுறைப் பாற்படும் என்றவாறு

மங்கல மொழியாவது—மங்கலத்தாற் கூறுஞ்சொல்.

அது செத்தாரைத் துஞ்சி ர் என்றல்.

அவையன்மொழியாவது இடக்கரடக்கிக் கூறுதல். அது கண்கழீஇ வருதுப ர்றல்.

மா றிலா வீனமையிற் சொல்லிய மொழியாவது ஒருவனைச் சிங்கம் வந்த தென் ற் போற் கூறுவது.

அவையெல்லாஞ் சொல்லாற் பொருள் ப்படாமையின் உள்ளுறைப்பாற்படும். இன்

ம் இவ்வாற்றூற் பொருள் கொள்ளுமாறு 'ஒல்லுவ தொல்லும்' என்னும் புறப்பாட்டினுள் றம் - ாகூ] 'கோயில ராகிின் புதல்வர்' எனவும் 'சிறக்கநின் னுளே' எனவும் வரு கலச்சொல் கெடுக என்னும் பொருள் பட்டவாறு காண்க.

"இதுவுமோ ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" [கலித்-அகூ] 1என்றது யொழுக்கம் ஒழுகினுய் என இடக்கரடக்கி யவையன்மொழியால் ஒழுக்கக் குறைபா ழியவாறு. (சூஅ

உ௱சக. சினனே பே[தை]தமை கிம்பிரி நல்குர

வனைால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

என்-னின், மெய்ப்பாட்டியலுள் நடுவண் ஐந்திணைக்குரிய தலைமக்கட்[2]காகாதன
த்தோதுகின்று ராகலின், அவற்றுள் ஒருசாரன ஓரோவிடத்து வருமென்பது
ணர்த்-ற்று.

இச்சூத்திரம் எதிரதுநோக்கிற்று.

சினமும் பேதைமையும் நிப்பிரியும் நல்குரவும் என்று சொல்லப்பட்ட அந்நான்
கையும் யாதானும் ஒருபொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும் என்றவாறு.

---

"கொடியிய னல்லார் குரனுற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
[1]தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்று தவர்." [கலித் - அஅ]

இதனுள் 'தொடிய எமக்கு நீயாரை' என்பது சினம்பற்றி வரினும் காமக்குறிப்பிற் புணர்ந்த தலைமகள் கூறுதலின் அவள் காதலைச் சிறப்பிக்க வந்தது.

"செவ்விய திவ்விய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய [2]வஞ்ஞான்
றவையெல்லாம்
பொய்யாத லி[யா]ன்யாங் கறிகோம[ற்]
றைய" [கலித் - ருக]

என்பதனுள் 'யான்யாங் கறிகோ' என ஏதம்பற்றி வந்த பிரிவாற்றுமையைச் சிறப்பிக்க வந்தது.

"அகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி." [கலித் - ௰௯]

என்பதனுள் தலைவி 'மகனல்லை' என [ல்] நிம்பிரியாகிய

வெறுப்புப் பற்றி வந்தது இதுவும்

பிரிவாற்றாமையைச் சிறப்பிக்க வந்தது.

"உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
வோரான் வல்சிச் சீறில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகன் வந்தெனன
வின்விழ வாயிற் றென்னுமிவ ளூரே." [குறுந் - ௨௯௬]

இதனுள் 'ஓரான் வல்சிச் சீறில் வாழ்க்கை' எனத் தலைமகன் செல்வக்குறைபா
கூறிப் 'பெருநலக் குறுமகன் வந்தென விழவாயிற்றென்னு மிவளூர்' என்றமையான் ந
குரவு பற்றித் தலைமகனைச் சிறப்பிக்க வந்தது. இச்சூத்திரத்துள் வரைந்து கூறாமையின்
தலைவியுந் தலைவனுந் தோழியுஞ் செவிலியுங் கூறப்பெறுவர் என்று கொள்க. (௬௧

௨௱௪௨. அன்னை யென்னை யென்றலு முளவே

தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந்
தோன்றா மரபின வென்மனார் புலவர்.

என்-னின், இதுவு மொருசார் மரபுணர்த்து தல் நுதலிற்று.

அன்னை என்னை என்று சொல்லுதலும் உள. அவை முன்புள்ளார் சொல்லி போந்த முறைமை. அவைதாம்சொல்லினானும் சொல்லிற் கங்கமாகிய எழுத்தினானு பொருள் தோன்றாத மரபினையுடைய என்றவாறு.

எழுத்தென்பது எழுத்தாகப் பிரித்தாற் படும் பொருள்வேறுபாடு. இவை யக தினும் புறத்தினும் வரும்.

---

(பிரதி)—1. தொடீய. 2. வன்னுன். 3. விளிவொடு வருந்தி.

"ஓரியி[ன] னெழுகு மென்னைக்குப்
[பரியன் மன்யான் பண்டொரு காலே."]

என்பது தலைமகள் தலைமகனைக் கூறியது.

"அன்னு யிவனோ விளமாணுக்கன்" [குறுந் - ௩௩]

என்[பது] தோழிக்குக் கூறியது.

"என்னைமுன் நில்லன்மின் றெவ்விர் [பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்"] [குறள் - எஎக]

"என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே" [புறம் - அச]

இவையும், 'என்றலும்'

என்ற வும்மையால் நிகரனவுங் கொள்க.

வரும்.

"எந்தைதன் னுள்ளங் குறைபடா வாறு"

((

உ௱சங. ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா
கற்பு மேரு மெழிலு மென்றா
சாயலு நாணு மடனு மென்றா
[1]நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங்
காவயின் வரூஉங் கிளவி யெல்லா
நாட்டியன் மரபி னெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப.

என்-னின், மேற் பொருட்பாகு [பாடு] முதல் கரு வுரிப் பொருளென வுணர்
அவற்றின்பாகுபாடு இத்துணையும் ஓதினார். அவற்றுட் பாகுபடுத்திக் [2]காட்டலாகா
சிலபொருள் கண்டு அவற்றைத்தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

ஒப்புமுதலாக நுகர்ச்சி யீறாக அவ்வழிவருஞ் சொல்லெல்லாம் நாட்டின்வழ
இன்ற மரபினானே பொருளை மனத்தினான் உணரினல்லது மாணாக்கர்க்கு இது பொ
என வேறுபடுத்தி யாசிரியன் காட்டலாகாத பொருளையுடைய என்றவாறு.

ஒப்பாவது—தந்தையையொக்கும் மகன்என்பது. அவ்விருவர்க்கும் பிற
வேறுபினவழி ஒப்பாகிய பொருள் யாதென்றார்க்கு இதுவெனக் காட்டலாகாமையின், .
விருவரையுங் கண்டான் அவ்வொருவ ரொருவரை ஒக்குமது பிறனொருவன் மாட்
காணுமையிற் றானே யப்பொருண்மையை உணரும் என்பது.

உரு என்பது—உட்கு. அது பயிலாத பொருளைக் கண்டுழி வருவதோர் ட
நிகழ்ச்சி. இவருட்கினார் என்றவழி மனத்தினான் உணரக் கிடந்தது.

வெறுப்பு என்பது—செறிவு. அது அடக்கங்குறித்து நின்றது. அவரடக்கமு
யர் என்றவழி யதுவும் மனத்தினான் உணரக் கிடந்தது.

கற்பு என்பது—மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி. அதுவும் மனத் துணரக் கிடந்தது.

ஏர் என்பது—தளிரின்கட் டோன்றுவதோர் பொலிவுபோல எல்லாவுறுப்பிற் கும் ஒப்பக்கிடந்து கண்டார்க் கின்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு. அது எல்லாவ

(பிரதி)—1. நோயினும் வேட்கையின் னுகர்வு. 2, காட்டலாகாதென.



த்திற்கும் பொதுவாகலின் வண்ணம் அன்றாயிற்று. இது வண்ணம் பற்றிவரும். வன் ஏருடையன்' என்றால் அதுவும் மனக்கொளக் கிடந்தது.

எழில்என்பது—அழகு. அது மிக்குங் குறைந்தும் நீடியும் குறுகியும் கோடி உயர்ம் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறைபாமல் அமைந்தி வருவதோர் அழகு. இதுவும் அழகியன் என்றவழி அழகினைப்பிரித்துக் காட்டல் காமையின் ஈண்டோதப்பட்டது.

சாயல் என்பது—மென்மை. அது நாயும் பன்றியும் போலாது மயிலுங் குயிலும் ால்வதோர் தன்மை. அதுவுங் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

நாண் என்றது—பெரியோர் ஒழுக்கத்துமாறாயின செய்யாமைக்கு நிகழ்வதோர் ழ்ச்சி. அதுவுங் காட்டலாகா[து.]

மடன் என்பது—பெண்டிர்க் குள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக் து கேட்டவாற்றாலுணரும் உணர்ச்சி. அதுவும் காட்டலாகா[து.]

நோய் என்பது—துன்பம். இவன் துன்பமுற்றான் என்றவழி அஃதெத்தன்மை து] என்றார்க்குக் காட்டலாகாமையின் அதுவும் ஈண்டோதப்பட்டது.

வேட்கை என்பது—யாதானும் ஒன்றைப் பெறல்வேண்டு மெனச் செல்லும் ா நிகழ்ச்சி. இவன் வேட்கையுடையான் என்றவழி அஃது எத்தன்மை என்றார்க்குக் ட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

ஆவயின் வருஉங் கிளவியெல்லாம் என்றதனுன் அன்பு அழுக்காறு பொறை
றிவு என்பனவும் இவைபோல்வனவுங் கொள்க. இவை யெல்லாம் அகத்திணை புறத்
ணை இரண்டிற்கும் பொது. இவை காட்டலாகாப் பொருளவாயின் இல்பொருண்மேற்
சான்ஙிகழ்ந்தவென்றுலோ எனின், இது மேற்கூறப்பட்ட பொருள் பொருளென்பது
றிவித்தல். அவை உள்பொருள் என்ப[து] வருகின்ற சூத்திரத்தான் உரைப். (உக)

உ௱சஉ. இமையோர் தே[எ]த்து மெறிகடல் வரைப்பினு
மவையில் கால மின்மை யான.

என்-னின், இதுவும் மேற்கூறப்பட்ட பொருள் பொருள் என்பது அறிவித்தலே
தலிற்று. தேவருலகத்தினும் கடல்சூழ்ந்த வுலகத்தினு மேற்சொல்லப்பட்ட பொரு
ில்லாத காலம் இன்மையான் உள்பொருளென்றே கொள்ளப்படும் என்றவாறு.

(உஉ)

ஐந்தாவது - பொருளியல் முற்றிற்று.